KALKI
16.2.2003
ரூ. 6.00

# கல்கி



## காதல் கன்ஸல்டன்ஸி!

அனுபவியுங்கள் ஜீவா.
ஓர் ஆயுர்வேதிக் சோப்பு
27 மடங்கு
சிறப்பானது,
உங்கள் சருமம் புத்துயிர் பெற.

27

அனுபவியுங்கள் ஜீவா. உங்கள் சருமத்திற்கு உகந்த சோப்பு ஜீவாவிலுள்ள 27 அத்தியாவசிய ஆயுர்வேத உட்பொருள்கள் சருமத்திற்கு ஊட்டமளித்து, மெருகூட்டி, பாதுகாக்கிறது. இதன் ஒப்பற்ற நுரை சரும துவாரங்களை திறப்பதோடு மட்டுமின்றி, இதில் நிறைந்த ஆயுர்வேத நற்குணங்கள் சருமத்தில் ஊடுருவிப் பாய்கிறது. எனவே உங்கள் சருமத்தில் இளமை, மென்மை மற்றும் பொலிவு பூத்துக் குலுங்குகிறது. மேலும் சருமத்திற்கு தருவதோ புத்துயிர்.

JEEVA™
The Complete Ayurvedic Soap

சருமம் புத்துயிர் பெறும்

From the house of Jyothy Laboratories Ltd. Shivshakti Estate, Marol, Andheri (E), Mumbai - 59.

Situations/JLL-JEEVA/89/2002 TAM

# கல்கி



16.2.2003



சொப்பனக்காரி!

பக்கம் : 92



"பொது வாழ்வில் மதத்துக்கு வேலையில்லை"
- பால் சக்கரியா

பக்கம் : 20



தத்தித் தாவும் சிந்தூரி!

பக்கம் : 12




பணம் VS பாரம்பரியம்

பக்கம் : 4



தட்டினேன் திறந்தது

பக்கம் : 24

# ஏன் ஆடறாங்க?

ஐந்து நட்சத்திர ஹோட்டல். குறைந்த வெளிச்சம் உமிழும் பல்புகள். அந்த அறைக் கதவைத் திறந்ததும் அரையிருட்டு...

"ம்... தடுமாறி விழுந்துடப் போறீங்க... ஜாக்கிரதை!"

"ஒன் மினிட்! ஒரு ஐந்நூறு ரூபாய் குடுங்க!"

"ஐயோ! இங்க வரணும்னா அவ்ளோ செலவழிக்கணுமா?"

"ஸாரி, மிஸ்டர்! இது வெறும் நுழைவுக் கட்டணம்! ஒரு ஜோடிக்கு."

"ஒரு ஜோடின்னா... கணவன், மனைவியா?"

"அப்படின்னு மட்டுமே அர்த்தம் பண்ணிக்கிட்டா அது உங்க விருப்பம்!"

"ஆனா யாருமே பணம் தரலையே! வேறு எதையோ தானே தர்றாங்க?"

"இங்க வரவங்கள்ல தொண்ணூறு சதவீதம் கிரெடிட் கார்டுகாரங்கதான்!"

"அம்மாடி! அத்தனை பேரும் ரொம்பப் பணக்காரங்களா? அவுங்க வர்ற இடத்துக்குத்தான் நாம வந்திருக்கமா?"

"பெருசுங்க எல்லாம் காஸ்மோபாலிடன் கிளப், மெட்ராஸ் கிரிக்கெட் கிளப்னு, பணக்காரங்களுக்கான கிளப்புக்குப் போவாங்க. அவங்களோட பசங்க, இங்க ஜோடியா வந்திடுவாங்க."

"இங்க வந்து என்ன பண்ணுவாங்க?"

தட்டுத் தடுமாறி ஒரு இருக்கையில் அமர்ந்து நோட்டம் விட்டால், வண்ண வண்ண விளக்குகள் சுழன்று சுழன்று வெளிச்சம் கக்கிக் கொண்டிருந்தன. அதிரடி மியூஸிக்... ஜோடி ஜோடியாய் இளசுகள்!

"அங்கே என்ன பண்ணிகிட்டிருக்காங்க?"

"பீர்... விஸ்கி..!"

"அந்தப் பொம்பளைங்க கூடவா?"

"ஏன்... பொம்பளைங்கன்னா பீர் சாப்பிடக் கூடாதா...? இப்படி நான் கேக்கலை! அந்த ஜீன்ஸ் போட்ட பொண்ணுங்க கேக்கறாங்க! வெறுமஸ்டைலா கோக், ஜூஸ் குடிக்கறவங்களும் இருக்காங்க."

"இதுக்கெல்லாம் தனியா பணம் தரணுமா?"

"பின்னே! ஒரு தபா ஜோடியா வந்திட்டுப் போனா ரெண்டு ஆரஞ்சு கலர் நோட்டு! (ஆயிரம் ரூபாய்) பழுத்திடும்!"

மியூஸிக் இரைச்சல் திடீரென்று அதிகரிக்க, ஜோடிகள் ஸ்பெஷலான ஒரு இடத்தில் கூடினார்கள். இலேசாக இடுப்புகள் அசைய ஆரம்பித்தன. கால்கள் தாளம் போட, கைகள் இறுகின. நேரம் ஆக ஆக வேகம் பிடித்தது டான்ஸ்! ஒரு கட்டத்தில் வியர்த்து, விறுவிறுக்க ஆடிக் கொண்



டிருந்தனர். இரண்டு பாட்டுக்கு ஆடினால், ரெண்டு பாட்டு ஓய்வு. மறுபடி டான்ஸ்!

இடையில் போய் கொஞ்சம் உற்சாக பானம் ஏற்றிக் கொண்டு வந்தார்கள். மீண்டும் அதிரடி மியூஸிக்; அரை குறை வெளிச்சம். எல்லாரும் போடும் ஆட்டம்.

"இவங்கெல்லாம் எதுக்காக இப்படி ஆடறாங்க?"

"உஸ்! ஏன் ஆடறாங்க? எதுக்கு ஆடறாங்கன்னெல்லாம் அனாவசியமா கேள்வி கேட்காதே! இவங்களுக்கெல்லாம் ரொம்ப டென்ஷனானா ரிலாக்ஸ் பண்ணத்தான் இங்க வராங்க. தண்ணியா பணத்தைக் கரைக்கறாங்க."

"அதோ... அவரைப் பார்த்தா... டி.வி சீரியல்ல வருவாரே... அவரை மாதிரியே இருக்குது!"

"மாதிரி என்ன மாதிரி? அவரேதான்! கூட ஆடறது அவங்க லவ்வர்! இந்தப் பக்கம் திரும்பிப் பாரு! ஆரு யாரு தெரியுதா?"

"ஐயோ! சினிமா ஸ்டாருங்ககூட இங்க வந்து ஆடுவாங்களா? சினிமாவுல வரா மாதிரி இல்லாம, இங்கே வேற மாதிரி ஆடறாங்களே!"

"சினிமாவுல வெறும் மேக் அப்தான்! இங்கே வெளியில மேக்கப்! உள்ளாற வேற சமாசாரம்!"

"பெரிய பெரியவங்க எல்லாருமே இங்க வருவாங்களா?"

"ம். சினிமாக்காரங்க, கிரிக்கெட்காரங்க, பிசினஸ், டி.வி, யாருக்கெல்லாம் பணம் நிறைய இருக்குதோ, தண்ணியா செலவழிக்க மனசு இருக்குதோ, எல்லாரும் வருவாங்க!"

"சரி... வா... புறப்படலாம். வேற ஒரு இடத்துக்கு அழைச்சு போறேன்!"

"இது என்ன எடம்! சூப்பரா இருக்குது!"

"இரு! இரு! முதல்ல உன் செருப்பைக் கழட்டு! உன்ன மாதிரி கேஸுகளுக்காக அங்கே பார்! ஷு வெச்சிருக்காங்க! அதை மாட்டிக்கோ!"

"ஷு மாட்டிக்கிட்டு உள்ள போனா டான்ஸ் ஆடணுமா?"

"இங்க டான்ஸ் ஆட மாட்டாங்க! நிதானமா உட்கார்ந்து, லைட்டா மியூஸிக் கேட்டுகினே பீர், ரம், விஸ்கி அடிப்பாங்க. புடிச்ச ஐட்டம் ஆர்டர் பண்ணி சாப்பிடுவாங்க!"

"ஹோட்டலா இது?"

"இல்லை. இதுக்குப் பேரு பப்! பெங்களூர், மும்பை, டெல்லியில தெருவுக்குத் தெருவு பப் இருக்கும்!"

"ஏங்க... பெரிய பெரிய எடமா அழைச்சிட்டுப் போறீங்களே! நமக்கு ஏத்த எடம் ஏதும் கிடையாதா?"

"காதைக் கொண்டாங்க சொல்றேன்... இதெல்லாம் பெரிய பெரிய இடம்னு யாரு சொன்னது...? பெரிய மனுஷங்களா தங்களை நினைச்சுக்கறவங்க வர்றதாலே இதெல்லாம் பெரிய இடம்னு பேர் வாங்கிடுது... வீதி முனையில இரண்டு முழம் பூ வாங்கிட்டு வீட்டுக்குப் போயும் வாலண்டைன்ஸ் டே கொண்டாடலாம்; ஆமா!"

**ரவுண்ட் அப் - மௌலி**




**கல்கி**

**பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட்டிற்காக பரதன் அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடுபவர் : கி.ராஜேந்திரன்**

கல்கி பில்டிங்ஸ்,
47-N.P., ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காட்டுதாங்கல், சென்னை - 97

ஆசிரியர் :
சீதா ரவி

ஆசிரியர் குழு :
செ. ஏக்நாத் ராஜ்
அனுராதா சேகர்
ஆர்.சி. ஜெயந்தன்

வடிவமைப்பு :
எஸ். ஸ்டீஃபன்
பி.ஆர். ராஜன்

தொலைபேசி :
22345622, 23, 24
தொலைநகல் :
044 - 22345621

மின்னஞ்சல் :
ஆசிரியர் குழு :
kalki@kalkiweekly.com
சந்தா பிரிவு :
subscription@kalkiweekly.com
பிற தகவல்களுக்கு :
info@kalkiweekly.com
கல்கி இன்டர்நெட் முகவரி :
www.kalkiweekly.com

சந்தா விவரம் :
உள்நாடு :
ஒரு வருடம் : ரூ.330/-
ஆறு மாதம் : ரூ.165/-
வெளிநாடு (விமானத்தபால்) :
ஒரு வருடம் : 62 யு.எஸ். டாலர்
இலங்கை : ரூ.2000/-

Bharathan Publications Private Limited, Kalki Buildings, 47-NP, Jawaharlal Nehru Road, Ekkaduthangal, Chennai - 600 097.

ஒவ்வொரு இதழும் உங்கள் மேன்மைக்கு




# பணம் Vs பாரம்பரியம்!

எஸ்.வி. சேகரின் நகைச்சுவை நாடக மேடை போல ஆகிவிட்டிருக்கிறது அந்த ஊர். சமீப காலம் வரை, தமிழக அமைச்சர்களில் ஒருவர் முகத்தைக் கூட நேரில் பார்த்திராத அந்தப் பகுதி மக்களின் முகங்களில் நமுட்டுச் சிரிப்பு!

அமைச்சரவையே இடம் பெயர்ந்து, தங்கள் ஊருக்கு வந்து விட்டதோ என்று எண்ணும்படி, டீக் கடையிலும், தேரடியிலும் கிளைக் கழகத் தொண்டன் மாதிரி திரியும் மாண்புமிகு அமைச்சர் பெருமக்களைப் பார்த்தால் சிரிக்காமல் என்ன செய்வார்கள்?

"போறப் போக்கைப்பார்த்தா, நம்ம காலை, கையைப் பிடிச்சி, அமுக்கி விட்டு, சேவகம் பண்ணுவாங்க டோய்!" என்று நரை தட்டிய திண்ணைப் பெரிசுகள் பொக்கை வாய்விட்டுச் சிரித்து மகிழ்கின்றனர்.

சாத்தான் குளம் சட்டமன்றத் தொகுதிக்குள் நுழைந்தால் முகத்தில் அறைகிறது வரண்டு போன செங்காற்று. குறுகிப் போன பனைகளும், பெருகிப்போன நாட்டுக் கருவேல மரங்களும், பசுமை தொலைத்த நாணல் புதர்களுமாய், பார்வையை நெறிக்கும் பொட்டல்காடு. மழைபெய்தால் மட்டுமே ஏதோ கொஞ்சம் நெல்லும், கடலையும் பயிர் செய்து மூச்சுவிட்டுக் கொள்கிற கிராமப்புறங்கள். நகரை ஒட்டிய வயற்காட்டை ஆடுகளமாக்கி, கிரிக்கெட் விளையாடிக் கொண்டிருந்தனர் விஜய ராமபுரம் கிராமத்து இளைஞர்கள்!

"அம்மா கொடுத்த பேட்டு, ஸ்டம்பு, பந்து" என்று சச்சின் ஸ்டைலில் பந்தா பண்ணியபடி ஜெயலலிதா படமும் இரட்டை இலைச் சின்னமும் ஒட்டப்பட்டிருந்த புத்தம் புது கிரிக்கெட் மட்டையைத் தூக்கிக் காட்டினார் தவசி ராஜ்.

சுவரில் இடம் பிடிப்பதில் தொடங்கி பிரசாரத்தில் எல்லா வகையிலும் முந்திக் கொண்டிருக்கிறது அ.தி.மு.க. பத்து இரட்டை இலை சின்னம் வரையப்பட்டிருந்தால் ஒரு கைச்சின்னம்தான் கண்ணில் படுகிறது.

விழுந்தடித்து அ.தி.மு.க.வுக்கு இத்தனை இடம் பிடித்த அந்த ஆள் யாரென்றால், அ.தி.மு.க. வேட்பாளர் நீலமேக வர்ணம்தான்! "சின்னம்



• பரிபூரணம், ராஜம்மாள்

ஆர்.சி. ஜெயந்தன்

வரைவதற்காகப் பூவுடையார்புரம் என்ற கிராமத்தில் சுவரில் வெள்ளை அடித்துக் கொண்டிருந்தேன். அப்போதுதான் நான் தேர்வான செய்தி வந்தது. அடிமட்டத் தொண்டனான எனக்கு எந்தத் தனிப்பட்ட செல்வாக்கும் இல்லை. எல்லாம் அம்மா செல்வாக்குதான்'' என்று ஒடுங்கிப் பேசும் நீலமேக வர்ணம் படித்திருப்பது ஐந்தாம் வகுப்பு.



• பொன்னம்பலம்



• மணிகண்டன்



• மாடசாமி

**சா**த்தான் குளம் தொகுதியின் வாக்காளர்களில் பெரும்பான்மையினர் நாடார் சமூகத்தினர். அதிலும் கிறிஸ்தவ நாடார்கள் அதிகம். ஹிந்து – கிறிஸ்தவ நாடார்களிடையே பெண் கொடுப்பது, பெண் எடுப்பது போன்ற உறவு முறை இணக்கம் அதிகம் இல்லா விட்டாலும், அந்நியோன்யமாகவே வாழ்ந்து வருகிறார்கள். ஆனால் அ.தி.மு.க. வேட்பாளர் கிறிஸ்தவ நாடாரா இல்லை, இந்து நாடாரா என்பதைக் கவனித்து காய் நகர்த்துவதற்காகக் காத்திருந்த காங்கிரஸ், நீலமேகவர்ணத்தின் தகுதிக்கும், அரசியல் அனுபவத்திற்கும் ஒருபடி அதிகமாய்த் தகுதி கொண்ட, பட்டதாரி வழக்கறிஞர் மகேந்திரனைக் களம் இறக்கியிருக்கிறது. நீலமேகவர்ணம், தொகுதிக்குள் அடங்கிய 'படுகப்பத்து' என்ற கிராமத்தைச் சேர்ந்த உள்ளூர்வாசி என்றால், மகேந்திரன் சுண்டாங்கோட்டை என்ற கிராமத்தைச் சேர்ந்த



• பழனி ஒதுவார்

• மாணிக்கநாடார்

## சுத்திச் சுத்தி வந்தீக...

◆ குளம் இருந்த ஊரில், சாத்தான் என்பவரும், அவரது நான்கு சகோதரர்களும் குடியேறி வாழ்ந்ததால் சாத்தான்குளம் ஆனது என்ற செய்தி, 1916ம் ஆண்டு வெளியிடப்பட்ட நெல்லை மாவட்ட கெஜட்டில் அப்போது கலெக்டராக இருந்த எச்.ஆர்.பேட் என்பவரால் குறிப்பிடப்பட்டுள்ளதாம்.

◆ இங்குள்ள வாக்காளர்களில் நாடார்களுக்கு அடுத்த நிலையில் தலித்துகளும், மூன்றாவது இடத்தில் யாதவர்களும், நான்காவது இடத்தில் தேவர்களும் இருக்கிறார்கள். கருங்குளம் ஒன்றியத்தில் அதிகமுள்ள தேவர் சமூக வாக்காளர்கள் பாரம்பரியமாக காங்கிரசை ஆதரிப்பவர்கள் என்பதால், அவர்களைக் கவர ஓ.பன்னீர் செல்வமும், தினகரனும் அங்கே உலவுகிறார்களாம்.

◆ மக்கள் தமிழ் தேசம் தலைவர் சாத்தான்குளத்தில் ஊழியர் கூட்டம் நடத்தி, காங்கிரசை ஆதரிக்கும்படி சொல்லிவிட, சும்மா இருக்குமா அ.தி.மு.க? தேர்தல் பணிக்குழுவில் யாதவர் சமூகத்தைச் சேர்ந்த கோகுல இந்திரா எம்.பி., எஸ்.எஸ். ராஜேந்திரன் இருவரையும் களத்தில் இறக்கிவிட, 'சுத்திச் சுத்தி வந்தீக...' என்று பாடாத குறையாக யாதவர் பகுதிகளைச் சுற்றுகிறார்களாம்.

◆ லோக்கல் நிர்வாகிகள் அனைவருக்கும் ஜெ. உருவப்படம் கொண்ட கடிகாரம் பரிசளித்திருக்கிறார்கள். களத்தில் தேர்தல் வேலை செய்யும் தொண்டர்களுக்குத் தினசரி இருநூற்று ஐம்பது பேட்டாவும் வெட்டப்படுகிறதாம்.

உள்ளூர்வாசி. அவர் கிராம கிளைக் கழகச் செயலாளராகத் தொடங்கி இன்று சாத்தான் குளம் ஒன்றியச் செயலாளராக வளர்ந்திருக்கிறார் என்றால், இவர் கல்லூரியில் படிக்கிற போதே மாணவர் காங்கிரஸ் செயலாளராகத் தொடங்கி இன்று தூத்துக்குடி மாவட்டத் துணைத் தலைவராக உயர்ந்திருக்கிறார். இருவருமே உறவு முறை சொல்லி உரிமையோடு வோட்டுச் கேட்கிறார்கள். இதனால் உள்ளாட்சிக்கு நடக்கும் பஞ்சாயத்து தேர்தல் மாதிரி சாத்தான்குளம் இடைத் தேர்தல் கலகலப்பாகிவிட்டாலும் போட்டி கடுமை தான்.



• தவசி ராஜ் டீம்

சமீபத்தில் தமிழக அரசு கொண்டு வந்த மதமாற்றத் தடைச் சட்டம், கிறிஸ்தவ வாக்காளர்களின் அதிருப்தியைச் சம்பாதித்து வைத்திருக்கிறது. "அறுபத்தைந்து சதவிகித கல்வி அறிவு பெற்ற, சாத்தான் குளம் கிறிஸ்தவ வாக்காளர்களுக்கு, அ.தி.மு.க. அரசு மீதான தங்கள் கோபத்தை மௌனமாக வெளிப்படுத்தும் நல்ல வாய்ப்பு இந்தத் தேர்தல்" என்கிறார் வி.ஆர்.எஸ். பெற்றுக் கொண்ட ஆசிரியரான நோவா.

சாத்தான்குளம் நகரில் வசித்துவரும் இவர், "சிறுபான்மை கல்வி நிறுவனங்களில் இருபது மாணவர்களுக்கு ஓர் ஆசிரியர் என்று பணியாற்றி வந்த ஆசிரியர்களை, நாற்பது மாணவர்களுக்கு ஒருவர் எனக் கூறி கருணையேயில்லாமல் இடமாற்றம் செய்ததில் பாதிக்கப்பட்டவர்கள் ஏராளம். அவர்களில் நானும் ஒருவன். குடும்பத்தைப் பிரிய முடியாமல்தான் நானே முன் வந்து வேலையை விட்டுவிட்டேன்'' என்று கொதிக்கிறார்.

"மதமாற்றத் தடைச் சட்டத்தைக் கிராமப்புற கிறிஸ்தவர்கள் தெளிவாக விளங்கிக் கொள்ளவில்லை என்றாலும், தேவாலய திருப்பலியில் 'அது கிறிஸ்தவர்களுக்கு எதிரானது' என்று பாதிரியார்கள் மூலம் அறிவுறுத்தப்பட்டிருக்கிறார்கள். அதனால் மக்கள் அ.தி.மு.க. அரசுக்கு எதிராகவே இருக்கிறார்கள்'' என்கிறார் சாத்தான்குளம் வட்டார காங்கிரஸ் அமைப்பாளரான பொன்னம்பலம்.

இன்னொரு புறம், மத மாற்றத் தடைச்சட்டம், இந்து மதத்தைக் காப்பாற்றுவதற்காகப் போடப்பட்டது என்கிற ரீதியில் பி.ஜே.பியினர் நேரடியாகவே அ.தி.மு.க. ஆதரவு பிரசாரம் செய்து வருகிறார்கள்! இதை ஒப்புக் கொள்கிறார் காவி அணிந்து, அ.தி.மு.க. தேர்தல் அலுவலகத்தைச் சுற்றிக் கொண்டிருக்கும் பழனி ஓதுவார்.

''மதமாற்றத் தடைச் சட்டமும், லாட்டரித் தடைச் சட்டமும் பிடித்திருக்கிறது. அதனால் இரட்டை இலைக்குத்தான் ஓட்டு'' என்கிறார் எம்.காம். படித்து வரும் மாணவர் மணிகண்டன்.

**ப**க்கத்துலே இருக்கிற நாங்குநேரியிலும், திருச்செந்தூரிலும் அ.தி.மு.க. எம்.எல்.ஏதான் இருக்கிறார்கள். அங்கே எந்த அடிப்படைத் தேவையையும் இன்னும் இவர்கள் செய்து கொடுக்கவில்லை. ஆனால் காலமான மணிநாடார், த.மா.க. எம்.எல்.ஏவாக இருந்த போது இங்கே சடையநேரி கால்வாய் கூட்டுக் குடிநீர்த் திட்டத்தைக் கொண்டு வந்து நிறைவேற்றினார். ஆட்சிக்கு வந்து இரண்டு வருடமாய் இந்தப் பக்கம் வராதவர்கள் இப்போது ஓடி வருகிறார்கள். இவர்களை நம்ப முடியாது. பாரம்பரியமாய் யாருக்குப் போட்டோமோ அவர்களுக்குத்தான் எங்கள் வாக்கு'' என்று கை உயர்த்திக் காட்டுகிறார் சாத்தான் குளம் ஆட்டோ ஓட்டுனர் சங்கச் செயலாளர் ஜெயக்குமார்.



• ஜெயக்குமார்

சாத்தான்குளத்தையடுத்த பண்டாரபுரம் கிராமத்தில் மாடு மேய்த்துக் கொண்டிருந்த மாணிக்க நாடார் அழுதே தீர்த்து விட்டார். "எந்தக் கட்சி ஆட்சிக்கு வந்தாலும் இங்கே குடிக்க தண்ணி இல்லீங்க. சம்பளமா எனக்கும், மாடுகளுக்கும் குடி தண்ணீர் வாங்கிக்கிறேன். இது நான் உழைச்சு சம்பாதிச்ச தண்ணிங்க'' என்று கையிலிருந்த பைக்குள் கையை விட்டு தண்ணீர் பாட்டிலை எடுத்துக் காட்டுகிறார்.

அமிர்தவிளை என்ற கிராமத்திலிருந்து இரண்டு கிலோ மீட்டர் தூரம் நடந்தே பண்டாரகபுரத்திற்குக் குடி தண்ணீர் எடுத்துப் போக வந்திருந்த ராஜம்மாள், பரிபூரணம் இருவரும், ''இதெல்லாம் எங்களுக்குப் பழகிப் போச்சுங்க... ஆனால் அரிசி விலையை ஆறு ரூபாயா ஏத்தினதுதான் தாங்க முடியலே... இந்தக் கொடுமை போதாதுன்னு இருபது கிலோ அரிசி வேணுமின்னா நாற்பது ரூபா கொடுத்து கைத்தறி சேலை கட்டாயம் வாங்கணும்னு சொல்றாங்க... மண்ணெண்ணெய் வேணும்னா டூத்தூள் கட்டாயம் வாங்கணும்னு சொல்றாங்க.... என்று வலியோடு புலம்ப ஆரம்பித்து விட்டார்கள்.

சுமை தூக்கும் தொழிலாளியான மாடசாமியின் கருத்தும், எதிர்பார்ப்பும் வேறு மாதிரி இருக்கிறது. "பாரம்பரியமா இது காங்கிரஸ் தொகுதியா இருக்கலாம். ஆனால் ஆளுங்கட்சிக்கு வோட்டுப் போட்டாத்தான் தொகுதிக்கு நல்லது நடக்கும்...'' என்கிறார். அ.தி.மு.க.வும் இதையே தனது முக்கிய பிரசார வியூகமாகக் கையாள்கிறது. இந்தப் பிரசாரம் வாக்காளர் மத்தியில் எடுபட்டாலும், கடைசி ஆயுதமாகப் பணத்தை வாரியிறைக்கத் தயாராகிவிட்டது அ.தி.மு.க. வாக்காளர்களை விலை பேசுவதற்கு முன்பு கிராமத் தலைவர்கள், எதிர்பார்த்து வரும் எதிர்க்கட்சி நிர்வாகிகளையும் சரி கட்டிவிட்டதாக வெளிப்படையாகவே சொல்கிறார்கள் அ.தி.மு.க. இரத்தத்தின் இரத்தங்கள்.

* நீலமேகவர்ணம்

''மக்கள் பணம் மக்களுக்கே சேர வேண்டும். எனவே கொடுக்கிற பணத்தை வாங்கிக் கொண்டு, 'கை'க்கு வாக்களியுங்கள்'' என்று பிரசாரம் செய்கிறது காங்கிரஸ்!



* பெருக்கெடுத்துவரும் வெள்ளம்...

* நோவா

''தி.மு.க. நேரடியாக எங்களை ஆதரிக்காவிட்டாலும் பரவாயில்லை...'' என்கிறார் காங்கிரஸ் வேட்பாளர் மகேந்திரன். "கலைஞர் கைது, வைகோ கைது, மாறன் மீதான தாக்குதல் என்று ஒவ்வொன்றையும் கண்டித்திருக்கிறோம்... இதைத் தி.மு.க. வாக்காளர்கள் அறிவார்கள்'' என்று பொடி வைத்துப் பிரசாரம் செய்கிறார்.

இருதரப்பிலும் வியூகங்கள் வகுக்கப்பட்டு பிரசாரம் தூள் பறந்தாலும், அ.தி.மு.க.வின் பணபலம், அதிகாரபலத்தோடு மோதுவது காங்கிரஸ் கட்சிக்கு வலி மிகுந்த போராட்டமாகவே இருக்கிறது.

படங்கள்: டிஜிட்டல் சண்முகம்

நாலு கால் கொண்டவற்றில் மேஜை, நாற்காலி. இரண்டு கால் கொண்டவற்றில் மனிதர்கள், பறப்பன வற்றில் விமானம் இவற்றைத் தவிர, மற்ற ஜீவராசிகள் அத்தனையையும் வகைவகையாய் டேஸ்ட் பண்ணுகிறவர்கள் சீனர்கள்.

அவர்களே ஒப்புக் கொள்ளாத வகையில் சமையல் செய்யப் பயன்படுத்தப் பட்ட பொருளால், பெரிய களேபரமே நடந்திருக்கிறது அங்கு சமீபத்தில்.

அந்தப் பொருள் தாய்ப்பால்!

சீனாவின் ஹூனான் மாவட்டத்தின் தலைநகரான செங்க்ஷாவில் இருக்கிறது அந்தப் பிரபலமான உணவகம்.



# தாய்ப்பாலில் உணவு!

அதன் விசேஷமே அவர்கள் பரிமாறும் சில உணவு வகைகள் தாய்ப் பால் கொண்டு தயாரிக்கப்பட்டிருப்பதுதான். பால் சப்ளை செய்ய கிராமத்துப் பகுதியில் அந்த உணவகத்தின் சப்ளையர்களாய் நிறைய தாய்மார்கள் இருந்தார்களாம். அந்தத் தாய்மார்களுக்கு நல்ல சம்பளம் கொடுத்து தினமும் பால் சேகரித்து வந்திருக்கிறார்கள். உணவகத்தின் சமையற்காரர், எப்படித்தான் இந்தச் செய்முறையைக் கண்டுபிடித்தாரோ, தாய் பாலைக் கொண்டு இரண்டு மூன்று உணவுப் பதார்த்தங்கள் தயாரிக்கிறார். இதைச் சாப்பிட்ட கஸ்டமர்கள் "பேஷ் பேஷ் ரொம்ப நன்னாயிருக்கு!" என்று சர்டிபிகேட் கொடுத்தவுடன், அதை இன்னும் விரிவாக்கி நூற்றுக்கும் மேற்பட்ட உணவு வகைகளைச் சமைக்கத் திட்டமிட்டார்கள்.

வாடிக்கையாளர்கள் இந்த உணவு வகைகளை ருசித்துச் சாப்பிட, உணவகத்தின் வியாபாரம் ஓஹோ என்று செழித்து, இன்னும் சில உணவகங்கள் திறக்க அவர்கள் திட்டமிட்டு அதைப் பற்றி விளம்பரப்படுத்தப் போக, வந்தது வினை!

சீனாவின் 'பெய்ஜிங் டைம்ஸ்' பத்திரிகை இதைப் பற்றி எழுதப் போய் இதற்கு எதிர்ப்பு வந்து சேர்ந்தது. சீனர்களிலேயே ஒரு சாரார் இதை ஏற்றுக் கொள்ளவில்லை.

"பாம்பு, தேளு, தவளைன்னு வாய்க்கு ருசியா எவ்வளவோ பண்டங்கள் இருக்கும்போது, ச்சீ, என்ன கண்றாவி இது?" என்கிறார்களாம்.

உணவக உரிமையாளர், "எங்க ஹோட்டல்ல வந்து சாப்பிட்டுவிட்டு அப்புறம் சொல்லச் சொல்லுங்க அவங்களை" என்கிறாராம் விடாமல்.

- ஆனந்த் ராகவ்

KALKI DESIGN STUDIO 1/03

மும்பை மசாலா

# மும்பை சிவம்!

“மும்பைக்குள் தினமும் புதிதாகப் பிரவேசிப்பவர்களின் எண்ணிக்கை ஆயிரத்தைத் தாண்டி விட்டதே!" என்று அலறுகிறார் சிவசேனையின் புதிய செயற்குழுத் தலைவர் உதவ் தாக்கரே. "வேலை வெட்டி என்று வருபவர்களைச் சொல்லவில்லை; ஆனால் வேலையற்றுத் திரிபவர்களையும், நம் சொத்துக்களை வெட்டி எடுத்துச் செல்பவர்களையும் தான் கண்டிக்கிறேன்" என்கிறார். இவர்களால் நம் பாதுகாப்பு கெடுவதுடன், தண்ணீர் சப்ளை, சுற்றுச் சூழல் பிரச்னை, அழகிய ஃப்ளைஓவருக்குக் கீழே அசிங்கமான குடிசைகள், என்று தலைவலிகள் பெருகுகின்றனவாம். "ஐயையோ..!" மறுபடியும் எழுபதுகளின் தாக்கமா?" என்று தென்னிந்தியர்கள் கலங்க வேண்டாம். 'பல வருடங்களாக இங்கே செட்டில் ஆனவர்களை ஒன்றும் செய்ய மாட்டோம்' என்று கண்ணால் ஒரு கோடி காட்டி விட்டாரே!



“கண்ணில் ஒரு கோடியைக் காட்டி விட்டு, அது கையில் கிடைக்காமல் செய்கிறார்களே... நியாயமா?" என்று கதறுகிறார் சுரேஷ் கபிலே - நடைபாதைக் கடைகள் சங்கத் தலைவர்! 'ப்ளேவின் மஹா போட்டோ கம்ப்யூட்டரைஸ்டு லாட்டரியில், இவர் நூறு ரூபாய் கொடுத்து வாங்கிய டிக்கெட்டுக்கு 'ஜாக்பாட்' அடித்து விட்டதென்று வீட்டிலுள்ளவர்கள் எல்லாம் கூத்தாட, கடைசியில், குலுக்கல் தினத்திற்கு முந்தைய நாள் இரவு பத்தரை மணி வரையில் வாங்கப்பட்ட டிக்கெட்டுகள்தான் செல்லுபடியாகும்; இது ஜாக்பாட் தினத்தன்று வாங்கப்பட்டது என்று சொல்லி விட்டார்கள். ஜாக்பாட் தவிர வேறு 'சோட்டா மோட்டா' பரிசுகளுக்குக் கால வரையறை கிடையாதென்பதால் டிக்கட் விற்பனை செய்யப்பட்டதாம்! ஹூம்... எல்லாம் நேரம்!

'நேரம் நல்ல நேரம்' என்று மும்பைத் தமிழர்கள் பாட ஆரம்பிக்கலாம் போலிருக்கிறதே? சுகி சிவம் பேச வருகிறார் என்றால் மக்கள் உருண்டு திரண்டு வந்து ஹாலை நிரம்பி வழியச் செய்கிறார்கள். அவர் தலைமையில் நடந்த பட்டிமன்றங்களுக்கும் (வாஷி, முலுண்ட்) ஏகக் கூட்டம்! அதுவும் முலுண்ட்டில், ஆண்டு விழா சீசன் டிக்கட்டு வைத்திருப்பவர்கள் தவிர, அன்றைய தினம் காசு கொடுத்து டிக்கெட் வாங்கி வந்தவர்கள் ஏராளம்! ஹா... சிவனார் புண்ணியத்தில், மெல்லத் தமிழ், இனி மும்பையிலாவது சுகித்து வாழும்?

- ஜெய்ஸ்ரீ ராஜ்

# தத்தித் தாவும் சிந்தூரி!

**ப**ளிச்சென்று பானுப்ரியாவை நினைவூட்டும் சிந்தூரி, 'தத்தித்தாவுது மனசு' படப்பிடிப்பில் கிடைத்தார். ''முதல் வாய்ப்பே ஷங்கர் இயக்கத்தில் கிடைக்கும்ன்னு எதிர்பார்த்தீர்களா?' என்று பேச்சுக் கொடுத்தோம்.

''தப்பு! தப்பு! எனக்கு முதல் படமா அமையப் போறது, 'பாய்ஸ்' இல்லே! இந்தப் படம்தான். ஏன்னா, இது அடுத்த மாதம் ரிலீஸ் ஆகுது. 'பாய்ஸ்' படத்தில் கூட, ஒரு சின்ன கேரக்டர்தான். இதில் மூன்று ஹீரோயின்கள்லே நானும் ஒருத்தி'' என்று சுத்தத் தமிழில் தத்தித் தாவினார்.

''கடவுளே! நீங்க இப்படிச் சொல்வது ஷங்கர் காதுக்குப் போனால், உங்கள் பகுதிகளைக் கத்தரிக்குக் காவு கொடுத்து விட மாட்டார்களா?'' என்று பயம் காட்டினால், அம்மணி அசரவேயில்லை. ''என்ன சார், சினிமா உலகத்துலே உண்மையைக் கூட பேச விட மாட்டீங்களா... நான் தப்பா எதுவுமே சொல்லலை. நீங்க தப்பா எழுதிடப் போறீங்க?'' என்று நம்மை மென்மையாய் எச்சரித்த சிந்தூரியிடம், ''நீங்கள் யாரைக் காதலிக்கிறீர்கள்?'' என்றோம். அவ்வளவுதான் ''இதென்ன பேட்டியா, இல்லை லூட்டியா?'' என்று அதட்டிய சிந்தூரியின் முகத்தில் கொஞ்சமாய்க் கொள்ளு வெடித்தது.

''தப்பா நினைச்சுட்டீங்களே, 'தத்தித் தாவுது மனசு' படத்தில் நீங்கள் யாரைக் காதலிக்கிறீர்கள்? என்பதைத் தான் இப்படி ஹைக்கூ ஃபார்மில் கேட்டு விட்டோம்'' என்று சமாளிக்க... ''இந்தப் படத்தில் காதல் கிடையாது, ஹீரோ கிடையாது, டூயட் கிடையாது, வில்லன் கிடையாது, ரேப் கிடையாது, அப்படியொரு கதை போதுமா?'' என்று மூச்சிரைக்க, படத்தின் ஒரு வரிக் கதையைப் போட்டு உடைத்தார் சிந்தூரி... படத்தின் கதை என்ன என்று மோப்பம் பிடித்துத் திரியும் சக பத்திரிகைக் கண்மணிகளுக்கு, ஏதோ நம்மால் முடிந்தது...

- ஸ்ரீ சக்கரம்

படங்கள்:
சங்கர் சத்தியமூர்த்தி




# வெடிகுண்டு வழக்கில் வெடித்தது பிரச்னை!

கோவை குண்டு வெடிப்பு வழக்கு தொடுக்கப்பட்டு ஐந்தாண்டுகளுக்கு மேல் ஆகிவிட்டது. இன்னமும் தீர்ப்புச் சொல்லப்படவில்லை; ஆனால் வழக்கை விசாரிக்கும் கோவை தனி நீதி மன்றத்தில் ஒரு புதிய பிரச்னை வெடித்திருக்கிறது.

நீதிபதி சிவகுமார் பொறுப்பு வகிக்கும் வரை, தாங்கள் இவ்வழக்கில் ஆஜராகப் போவதில்லை என்று சூளுரைத் திருக்கின்றனர் அரசு தரப்பு வழக்குரைஞர்கள்!

வழக்கைத் தாமதப்படுத்தி வருவதற்காக நீதிபதி அவர்களைக் கண்டனம் செய்யப்போக, ஸ்பெஷல் பப்ளிக் பிராஸிக்கியூட்டர்களான பி.கே. அசோகன், எஸ். ராஜமாணிக்கம் ஆகியோர் அதை ஆட்சேபித்து நீதி மன்றத்திலேயே எதிர்த்திருப்பது அதிர்ச்சியூட்டும், கண்ணியக்குறைவான நடத்தை.

அரசு தரப்பு வழக்குரைஞர்கள் அரசு இயந்திரத்தின் ஓர் அங்கம். அரசு தொடுத்த வழக்கை சிறப்பாக மட்டுமின்றி, சுறுசுறுப்பாகவும் தாமதமின்றியும் நடத்தி முடிக்கும் பொறுப்பு



கல்கி



2003 பிப்ரவரி 16
சித்ரபானு மாசி 4
மலர் : 61
இதழ் : 29




அவர்களுக்கு இருக்கிறது. அதிலும் தனி நீதி மன்றம் நிறுவி சிறப்புப் பொறுப்பும் தரப்பட்டிருப்பது வழக்கின் முக்கியத்துவம் கருதித்தான். இவ்வாறு இருக்க, வழக்கு அரசு தரப்பு வழக்குரைஞர்களால் தாமதப்படுத்தப்படுகிறது என்று, நீதிபதியே நொந்து கொள்ளும் அளவுக்கு அது இழுத்தடிக்கப்படுகிறது.

விசாரணைக்கு முன்னதாகவே சாட்சிகள் குறித்த விவரங்களை நீதி மன்றத்தில் சமர்ப்பிக்கும்படி நீதிபதி பலமுறை கேட்டுக் கொண்டிருக்கிறார். ஆனால் ஒவ்வொரு முறையும் இக்கடமையில் தவறியிருக்கின்றனர் அரசு தரப்பு வழக்குரைஞர்கள்.

இதை நீதிபதி சுட்டிக்காட்டப் போக, அங்கே வழக்கு நடப்பதற்குப் பதில் நீதிபதிக்கும் அரசு தரப்பு வக்கீல்களுக்கும் வாக்குவாதம்தான் நடந்திருக்கிறது!

நீதி மன்றத்துக்குக் கட்டுப்பட மறுத்த அரசு தரப்பு வழக்குரைஞர்களைப் பற்றி உயர் நீதி மன்றத்தில் புகார் செய்து, சட்டபூர்வமான நடவடிக்கை கோரியிருக்கிறார் நீதிபதி சிவகுமார்!

அரசு இயந்திரத்துக்கும் நீதித்துறைக்கும் இடையே இப்படிப்பட்ட மோதல்கள் நிகழ்வது மிக அபாயகரமானது.

அரசுத் துறையிடமும் நீதித் துறையிடமும் பொதுமக்கள் ஒருங்கே நம்பிக்கை இழக்கச் செய்வதுடன், குற்றம் சாட்டப் பெற்று விசாரணைக்கு உட்படுத்தப்படுவோருக்கு இத்தகைய தாமதங்களால் அநீதியே இழைக்கப்படுகிறது.

'கோவை தொடர் குண்டு வெடிப்பு வழக்குப் பதிவாகி விசாரணைக் கைதிகளாக ஐந்தாண்டுகளுக்கும் மேல் சிறையில் இருப்பவர்களுள் பலர் வயதானவர்கள்; உடல்நிலை




சரியில்லாதவர்கள். அவர்களுக்கு மட்டுமேனும் ஜாமீன் வழங்க வேண்டும்' என்று அவர்களது வழக்குரைஞர்கள் கேட்டுள்ளனர்.

திட்டமிட்ட சதி வழக்கு; நாட்டின் விதியையே மாற்றியமைத்திருக்கக் கூடிய சம்பவம்; தலைவர்களைக் குறி வைத்த கொலை வழக்கு; அண்டை நாட்டுச் சதி என சந்தேகிக் கப்படும் நிகழ்வு; என்று பல வகைகளிலும் முக்கியத்துவம் பெற்ற ஒரு வழக்கிற்கே இந்தக் கதிதான் என்னும்போது, வைகோ அல்லது நெடுமாறன் பேரில் பதிவாகியிருக்கக் கூடிய வழக்குகளைத் துரிதமாக நடத்தி முடிக்க, அரசு தரப்பில் மெய்யான முயற்சிகள் எடுக்கப்படும் என எவ்வாறு நம்புவது?

அதனினும் கொடுமை... இந்நாட்டின் சராசரிக் குடிமகனுக்கு நீதி மன்றத்தில் காலதாமதமின்றி ஒரு நியாயம் கிடைக்கும் என எந்த அடிப்படையில் நம்புவது?

அரசு தரப்பு வழக்குரைஞர்கள் அரசுப் பிரதிநிதிகளாக இருக்கலாம். ஆனால், அவர்களும் நீதி மன்றத்துக்கும், அதன் விதிகளுக்கும், சட்ட திட்டங்களுக்கும் கட்டுப்பட வேண்டியவர்களே. இந்த உணர்வும், விருப்பு வெறுப்பற்ற, அரசியல் சார்பற்ற சம நோக்கும் மிக அவசியம்.

வழக்கின் இறுதியில் நீதி வழங்கப்படுவது மிக முக்கியமே. ஆனால் வழக்கை நியாயமான முறையில், விரைவாக நடத்தி முடிக்க வேண்டியதும் அவ்வளவுக்கவ்வளவு முக்கியம். அரசு தரப்பு வக்கீல்களே இதற்கு வழிகாட்ட மறுத்தால், மற்றவர்களுக்குத் தவறான முன்னுதாரணமாகிப் போவார்கள். சட்டமும் நீதியும் கைகோப்பதற்குப் பதிலாகச் சிண்டைப் பிடித்துக் கொண்டால், நாட்டில் சட்டம் ஒழுங்கு காணாமல் போய்விடும்.

# வில்லிபாரதம்

## மூலமும் தெளிவுரையும்

உரையாசிரியர்
பேராசிரியர் அ. மாணிக்கனார் எம்.ஏ.

2000 பக்கங்களுக்கு மேல்
நான்கு தொகுதிகளில்
விலை ரூ. 650
**சலுகை விலை ரூ. 425**

முனிவர்களாலும், தேவர்களாலும், பிறராலும் போற்றப்படும் பலப்பல சிறப்புக்களையுடையது 'பாரதம்!' கண்ணபிரானின் வரலாறு இடையிடையே வருகின்ற காரணத்தால்தான் வில்லிபுத் தூராழ்வார் இதனைப் பாடினார்.

**"மன்னும் மாதவன் சரிதமும் இடையிடை
வழங்கும்
என்னும் ஆசையால் யானும் ஈது
இயம்புதற்கு இசைந்தேன்!"**

எனக் காப்பியத் தொடக்கத்திலேயே குறிப்பிட்டுள்ளார், வில்லிபுத்தூரார்.

திருமால் வழிபாடு தொல்காப்பியக் காலந் தொடங்கி வழிவழியாகப் போற்றப்பட்டு வருகிறது. ஆழ்வார்கள் கண்ணனைப் பலவாறு பாடிக் களித்தனர். பெரியாழ்வார் இருநூற்று எழுபத்து ஒன்பது பாசுரங் களில் கண்ணனைப் பாடியுள்ளார். அவர் மகள் ஆண்டாள் கண்ணன் என்னும் தெய்வத்திடம் தம் உள்ளத் தைப் பறி கொடுத்தமை 'திருவெம்பாவை' புலப்படுத்துகிறது. பொய்கையாழ்வார் இருபது பாசுரங்களாலும், பூதத்தாழ் வார் இருபத்திரண்டு பாசுரங்களாலும் பேயாழ்வார் இருபத்தி ஏழு பாசுரங் களாலும், திருமழிசைப் பிரான் முப்பது பாசுரங்களாலும், இராமாவதாரத்திலேயே ஆழ்ந்து ஈடுபட்ட குலசேகரர் தம் பத்துத் திருமொழிகளில் இரண்டு திருமொழிகளாலும் கண்ணனை அர்ச்சித் துள்ளனர்.

தொண்டரடிப் பொடியாழ்வார் "கண்ண னல்லால் தெய்வமில்லை" என உறுதி யுடன் கூறுகிறார். திருமங்கையாழ்வார் கண்ணனைப் பற்றி அறுபத்து நான்கு பாசுரங்களைப் பாடித் திருமால் கண்ண னாகத் தோன்றிய பெருமையை விளக்கு கிறார். நம்மாழ்வார் தேவர்கட்கெல்லாம் கருவாகிய கண்ணனைக் கண்டு கொண்ட தாகப் பாடி மகிழ்கிறார்.

பிற்காலத்தே தோன்றிய மகாகவி பாரதி யார் கண்ணனைத் தோழனாக, தாயாக, தந்தையாக, சேவகனாக, அரசனாக, சீடனாக, சற்குருவாக, குழந்தையாக, தீராத விளையாட்டுப் பிள்ளையாக, காதலனாக, கண்ணம்மா என்னும் காதலி யாக, குலதெய்வமாகப் பல கோணங் களில் பார்த்துப் பாடிப் பரவசமடை கிறார்.

இவற்றையெல்லாம் நோக்கும்போது 'மன்னும் மாதவன் சரிதத்தில்' வில்லிபுத்தூ ராழ்வார் கொண்ட பக்தியினை நம்மால் புரிந்து கொள்ள முடிகிறது.

சுருங்கக் கூறினால் பாரதம் என்னும் கற்பகத் தருவில் மற்றவரெல்லாரும் அடி மரமாக, கிளைகளாக, இலைகளாக, மலர் களாகத் திகழக் கண்ணபிரானோ அதன் ஆணிவேராக விளங்குகிறார்! பஞ்சவர்க்குத் தூது சென்ற பரந்தாமனின் பெருமையை யாரே அறிவார்? கம்பன் கண்ட சுந்தர காண்டம் அல்லவா, வில்லி கண்ட கிருஷ்ணன் தூதுச் சருக்கம்!

**கண்ணபிரான் பெருமையை
இந்நான்கு தொகுதிகளிலும்
கண்டு களிப்போமாக!**

இந்த நான்கு தொகுதிகளையும் தபாலில் பெற 28.2.2003க்குள் கடிதம் எழுதுக. V.P.P. யில் அனுப்புகிறோம். சலுகை விலை ரூ. 425 + தபால் மற்றும் கட்டுச் செலவு ரூ. 50 சேர்த்து ரூ. 475 மட்டும் தபால்காரரிடம் செலுத்தி நான்கு தொகுதிகளையும் பெற்றுக் கொள்ளலாம். நேரில் 28.2.2003க்குள் ரூ. 425 மட்டும் செலுத்தி நூலினை உடனே பெறலாம். நேரம் : காலை 10 மணி முதல் இரவு 8 மணி வரை உணவு இடைவேளையின்றி. ஞாயிறு விடுமுறை.

கடிதம் எழுத வேண்டிய முகவரி:
**வர்த்தமானன் பதிப்பகம்**
15, சரோஜினி தெரு, தியாகராயநகர்,
சென்னை - 17.
(உஸ்மான் சாலை - கீதாஞ்சலி ஹோட்டல் அருகில்)

**கோயமுத்தூர் விஜயா பதிப்பகத்திலும்** (தொலைபேசி: 394614, 382614) சலுகை விலை ரூ. 425 மட்டும், 28.2.2003க்குள் நேரில் ரொக்கமாகச் செலுத்தி நூலினைப் பெறலாம்.

# சைக்காலஜிஸ்ட் அவசியமா?



நம் இந்திய கிரிக்கெட் குழுவில் அதிகப்படியாக ஒருவர் சேர்க்கப் பட்டிருக்கிறார் – "ஸ்போர்ட்ஸ் சைக் காலஜிஸ்ட்!"

கிரிக்கெட் வீரர்களுக்கு ஸ்போர்ட்ஸ் சைக் காலஜிஸ்டின் உதவி அவசியமா? மனவியல் மருத்துவர் டாக்டர் சுரேஷ்குமாரிடம் கேட்டோம்.

'நிச்சயமாக! பதற்றமும் டென்ஷனும் கிரிக் கெட்டில் மிகவும் அதிகமாவதற்குப் பல காரணங்கள். பொதுவாக ஒரு நல்ல விளையாட்டு வீரனுக்குத் தோல்வியை ஏற்கும் பக்குவம் என்பது இயல்பாகவே அதிகமாக இருக்கும். பல காலமாகவே அந்த விளை யாட்டில் ஈடுபடுவதால் ஒரு பந்தயத்தில் தோல்வி யுற்றால் இடிந்து போகமாட்டான். ஆனால் ஒருவன் நாடறிந்த கிரிக்கெட் வீரனாகும்போது அவனைக் குறித்த எதிர்பார்ப்புகள் எகிறுகின்றன. தப்பு செய்து விடு வோமோ என்று பயப்படுகிறான். ஒரு குறிப்பிட்ட பந்தில் அவுட்டாகி விட் டால் "அது என் தவறால்தானோ? இதே போன்று மீண்டும் பந்து வீசப்பட்டால் நான் அவுட்டாகி விடுவேனோ?" என் றெல்லாம் எதிர்மறையாக சிந்திக்கத் தொடங்கிவிடுகிறான்.



• சுரேஷ்குமார்

இந்த நேரத்தில் ஒரு ஸ்போர்ட்ஸ் சைக்காலஜிஸ்ட்டால் உதவமுடியும். முதலில் எளிதாக மனத்தை இலகுவாக்கும் பயிற்சி களை அவர் வீரர்களுக்குக் கற்றுத் தருவார். பிராணாயாமம் கூட ஓர் அற்புதமான மூச்சுப் பயிற்சி முறைதான்! அடுத்து தசை களைத் தளர்த்திக் கொள்ளும் நுட்பங்களை (இவற்றை ஜேக்கப்சன் நுட்பங்கள் என்போம்) கற்றுக் கொடுப்பார்.

மனம் என்பது மெழுகு அல்லது பிளாஸ்டிக் போல. அதை எப்படியும் வடிவமைக்க முடியும். உலகக் கோப்பையில் இடம் பெறும் அத்தனை இந்திய கிரிக்கெட் வீரர்களுமே திறமைசாலிகளாகத்தான் இருப்பார்கள். அவர்கள் திறமையை அவர்களே உணரும் வகையில் "ஆட்டோ சஜஷன்" செய்து கொள்ள வைப்பார் ஸ்போர்ட்ஸ் சைக் காலஜிஸ்ட். "நான் ஒவ்வொரு பந்தயத்திலும் நான்கு விக் கெட்டுகளையாவது வீழ்த்து வேன், நான் ஐம்பது ரன்களா வது நிச்சயம் எடுப்பேன்'' என்பது போன்ற பாஸிடிவான அணுகுமுறையாக இது இருக்கும்.



கிரிக்கெட் அணியைப் பொருத்தவரை குழு மனப்பான் மைக்கு உதவுவதும் இந்த மருத்து வரின் கடமை.

இந்திய கிரிக்கெட் கட்டுப் பாட்டு வாரியத்தின் இந்த முடிவு வரவேற்கத்தக்கது.

இதற்கு ஒரு நிரூபணமாக – அதாவது கிரிக்கெட்டில் மனப் பயிற்சியின் பங்கு மகோன்னத மானது என்பதற்கான ஆதாரமாக – ஒரு நிகழ்ச்சியை என்னால் சொல்ல முடியும். கிரிக்கெட் வீரர் களில் ஜோஷியை ஒரு விமானப் பய ணத்தில் சந்தித்தேன். அப்போது அவர், "என் கிரிக்கெட் வாழ்க்கை அஸ்தமனமாகிவிட்டதாகவே ஒரு கட்டத்தில் நினைத்தேன். அப்போது பிஷன்சிங்பேடி மனத்திற்குப் புத்துணர்ச்சியான பல விஷயங் களைக் கூறி உற்சாகப்படுத்தினார். தன்னம்பிக்கையோடு நான் களம் புகுந்த 'இரண்டாவது இன்னிங்ஸ்' முந்தையதைவிட சிறப்பானதாகவே இருந்தது" என்றார்.

– ஜி.எஸ்.எஸ்

படம்: ஸ்ரீஹரி



கன்னியாகுமரியைச் சேர்ந்த வரதராஜன் என்பவருக்கு 'ஹாய்' சொல்லுங்கள். இந்த அத்தியாயத்தின் கேஸ் ஹிஸ்டரிக்கு அவர்தானே முழு மூல உரிமையாளர்!

"எனக்குத் தெரிந்த டிரைவர் ஒருத்தர். வரதராஜன்னு பேர்... ரொம்ப நல்ல டைப்... லாரி டிரைவரா இருக்காரு... மூல வியாதியாலே ரொம்ப சிரமப் படறாரு... உங்களைப் பற்றி சொல்லியிருக்கேன்'' என்று நைஸாகப் பேசி, சௌகரியமான நாளில் அப்பாயிண்ட்மெண்ட் வாங்கிக் கொண்டுவிட்டார் அந்த நண்பர்.

வரதராஜனும் வந்தார். மூல நோய் கடுமையாக இருந்தது. ஆபரேஷன், அது இது என்று ரொம்பவே பயந்து போயிருந்தார்.

"அய்யா... நீங்க லாரி டிரைவரா இருக்கீங்க... பிருஷ்ட பாகத்துக்கு அழுத்தம் கொடுத்து அமர்ந்த நிலையில், நாள் முழுக்க வண்டி ஓட்டுவதால், இந்தப் பிரச்னை... அது மட்டுமில்லாமல், உங்கள் உணவிலும் நார்ச்சத்து அதிகமில்லை... அதுதான் பைல்ஸ் வந்து அவதிப்பட்டுக் கொண்டிருக்கிறீர்கள். உங்கள் நோயை என்னால் குணமாக்க முடியும்... சின்னப் பந்தயம்.. உங்களால் முடியும் என்றால், நோயைக் களைய என்னால் முடியும்'' என்று பீடிகை போட்டேன்.

அவருக்கிருந்த அவஸ்தையில், நூறு மீட்டர் ஓட்டப்பந்தயம் என்று சொன்னால்கூட ஒப்புக் கொண்டிருப்பார் போல!... அவ்வளவு வலி!

"வரதராஜன்... இன்னும் ஒரு மாசத்துக்கு அசைவம் பக்கமே போகக் கூடாது. வேக வைத்த காய்கறி, கீரை நிறைய சாப்பிடணும்'' என்று ஆரம்பித்தேன்.

''வண்டியிலே உட்கார்ந்து மிதி மிதிச்சா, ரோட்டோரக் கடையிலே என்ன கிடைக்குதோ, அதைச் சாப்பிட்டே பழகிட்டேன்... 'ஹைவே'லே நீங்க சொல்றதெல்லாம் கிடைக்காது ஸார்'' என்றார் பரிதாபமாக.

"சரி... நீர் மோர் கிடைக்குமில்லையா? அதை வாங்கிக்குங்க... கைப்பிடி அளவு சின்ன வெங்காயம் வைச்சு, அப்பப்போ சாப்பிடுங்க... அதுலேயே குணமாயிடும்... அது தவிர களிம்பு, லேகியம் தர்றேன்'' என்று அனுப்பி வைத்தேன்.

வரதராஜன் இப்போது மைனஸ் மூல நோயாக, மிக உற்சாகமாக வண்டி ஓட்டி வருகிறார்.

"கவுச்சியா...? தொடறதே இல்லை ஸார்'' என்கிறார்...!

# மூலத்துக்குக் கடுக்காய் கொடுங்க!

மூல நோய் வருவதற்கு முக்கியக் காரணம் என்ன? அபான வாயு தடைப்பட்டு, மேல் நோக்கிச் சென்று இந்த்ரியங்களைத் தாக்கி, நோயை உண்டு பண்ணுகிறது. எனவே அபான வாயுவை, கீழ்முகமாக இறக்குவது மிக முக்கியமான சிகிச்சையாக ஆயுர்வேதத்தில் கருதப்படுகிறது.

மூல முளைகளின் நிறத்தையும், அளவையும் வைத்தும், இரத்தக் கசிவை வைத்தும், மூல நோயின் தன்மையை அறிந்து, வாதஜமானதா, பித்தஜமானதா, கபஜமானதா என்று அறிந்து சிகிச்சை தரப்படுகிறது.

அர்சஸ் என்கிற மூலநோய் அதிசாரம் என்கிற வயிற்றுப் போக்கு நோய், ஹரகணி என்கிற செரி

மானமின்மை நோய் இவை மூன்றும் உடலில் உள்ள ஜடராக்னியை நம்பியே உள்ளன. இந்த மூன்றும் ஒன்றுக்கொன்று தொடர்புள்ளதாக இருப்பதால், ஏதாவது ஒன்று இருந்தால், மற்ற இரண்டு சம்மன் இல்லாமலேயே ஆஜராகி விடும்... எளிதில் ஜீரணமாகும்படியான நார்ச்சத்து உணவைப் பரிந்துரைக்கிறோம். அபான வாயுவை, கீழ்முகமாக இயக்கக் கூடியதும், அக்னியைப் பலப்படுத்துவதுமான அன்னங்களையும், பானங்களையும், ஔஷதங்களையும் கொடுக்க வேண்டும். இதற்கு எதிரானவற்றை விலக்க வேண்டும்...

'சுஷ்கா அர்சஸ்' எனப்படும் இரத்தக் கசிவு இல்லாத மூலத்துக்கு சேரங்கொட்டையும், இரத்தக் கசிவு உள்ள மூலத்துக்கு, குடஜப்பாலையும் (வெட்பாலரிசி) சிறந்த மருந்துகளாகின்றன.

அதிகப் புளிப்பில்லாத, கடைந்த மோர், எல்லா மூல முளைகளுக்கும் எல்லாக் காலத்திலும் ஏற்றது. மலவிருத்தி செய்யக்கூடியது. மல சுத்தியும் ஏற்படும். இதில்லாமல், கடுக்காய் பிரயோகங்கள், 'சூரணம்' என்று சொல்லக் கூடிய காட்டுச்சேனை, கருணைக் கிழங்கு இவற்றால் செய்யப்பட்ட மருந்துகள், மூல நோய்க்கு அற்புதமானவை!

புங்கம் பட்டையினால் செய்த பூதிகரஞ்சாஸவம் மூலத்துக்கு முக்கிய மருந்தாகப் பயன்படும்.

மூல முளைகளுக்கு வத்தி சிகிச்சையும் பலனளிக்கும். சிவதை, கருஞ்சிவதை, திப்பிலி, நேபாளம் போன்றவற்றால் வத்திகள் செய்து, அவற்றை rectal suppository போல் செய்து, ஆசனவாயில் வைக்கின்ற சிகிச்சையும் நல்ல பயனளிக்கும்.

வலி அதிகமாக இருக்கின்ற போது, Sitzbath' என்று சொல்லக்கூடிய 'அவகாஹ ஸ்வேதம்' செய்வதும் உண்டு. குதத்தில் அதிகமான வலி இருந்தால் அதற்கு 'சாருங்கேரியாதி நெய்' என்று சொல்லப்படும் புளியாரை நெய் சிறந்தது. ரத்தம் போகின்ற அர்சஸில், வெள்ளிரோத்தி, என்னூ, இலவம்பிசின், மஞ்சிஷ்டி, சந்தனம், கரு நெய்தல், அதிமதுரம், அருகம்புல், வெள்ளாட்டுப்பால் முக்கிய மருந்தாகின்றன.

'காஞ்சொரி' எனப்படும் 'துராலப அரிஷ்டம்' 'தந்தி' என்று சொல்லக்கூடிய நேபாளத்தினால் செய்யப்பட்ட அரிஷ்டம், கடுக்காயினால் தயாரிக்கப்பட்ட அபயாரிஷ்டம் போன்றவை நம்பிக்கையான மருந்துகளாகக் கருதப்படுகின்றன.

**மோ**ரின் பலனை ஏற்கெனவே சொல்லி விட்டேன்... இருந்தும் சிறப்பாகச் சில விஷயங்கள்: சித்திர மூலப் பொடியை, மோரில் கலந்து சாப்பிட, மூலம் குணமாகும். கடுக்காயும் அருமையான காம்பினேஷன். கடுக்காய்ப் பொடியை மோரில் சேர்த்துச் சாப்பிடலாம். ஹிங்குவாதி சூரணத்தை மோரில் கலந்து சாப்பிட்டாலும் விரைவான குணம் தெரியும்.

கருணைக் கிழங்குடன் மோர் சேர்த்துச் சாப்பிடலாம். நெய் பொரி மாவில் மோர் சேர்த்துச் சாப்பிடலாம்.

சில நேரங்களில் மருந்துகளாலும் பத்தியத்திலும் மூலம் குணமாகாமல் போகும் போது, அறுவை சிகிச்சையே சிறந்தது என்று ஆயுர்வேதமே குறிப்பிட்டுள்ளது.

சிறிய வெங்காயம், நீர் மோர், கீரை, நெய், கடுக்காய், காய்கறிகளை நிறையச் சாப்பிட்டு வந்தாலே மூலத்துக்கு முடிவு கட்டி விடலாம்.

(தொடரும்)



அவர் இடும் கட்டளைகளை நிறைவேற்ற, உணர்ச்சி மிகுந்த கூட்டம் ஒன்று காத்திருக்கிறது.

"அவனது பேனா வழியாகக் கொடூர விஷம் வழிந்து கொண்டிருக்கிறது. நாகரிகத்தின் அனைத்து எல்லைகளையும் அவன் மீறிவிட்டான். இந்தப் பேய்மனம் கொண்டவனுக்கு எதிராக கிளர்ந்தெழ வேண்டிய நேரம் வந்து விட்டது. அம்மாவின் பக்தர்களாகிய நாம் சரியான முறையில் இவனுக்கு எதிர்ப்புத் தெரிவிக்க வேண்டும். பொறுமை காப்பது நமது பலவீனம் என்று அவன் நினைக்கலாம். இந்தக் கொடூரனுக்கு எதிராக ஏதாவது செய்தே ஆக வேண்டும். ம்... கிளம்புங்கள்."

-மலையாள இலக்கிய உலகின் மரியாதைக்குரிய

# "பொது வாழ்வில் மதத்துக்கு வேலையில்லை!"

எழுத்தாளரான பால் சக்கரியாவுக்கு எதிராக, மாதா அமிர்தானந்தமயி பக்தகோடிகளின் மிரட்டல் வசவுகள்தான் இவை!

"ஒன்றரை மாதத்துக்கு முன்பு பி.ஜே.பி. ஒரு பந்த் நடத்தியது. அன்றுதான் அந்த அம்மாவின் பிறந்த நாள். பி.ஜே.பி., ஆர்.எஸ்.எஸ். தலைவர்கள், என்று அவரைப் பார்க்க பெருங்கூட்டம் சென்று கொண்டிருந்தது. இவர்களுடன் அவரது பக்தர்களும் ஒரு தெய்வத்தின் தரிசனத்துக்குச் செல்வது போல படையெடுக்கிறார்கள். 'பந்த்' அன்று பேருந்து இல்லாமல், கடைகள் இல்லாமல் அந்த பக்தர்கள் எவ்வளவு பாதிப்புக்குள்ளாவார்கள் என்றுதான் கேட்டிருந்தேன். சர்வ வல்லமை படைத்த அம்மா நினைத்திருந்தால் இந்த 'பந்தை' வேறொரு நாள் நடத்தச் சொல்லியிருக்கலாமே என்று கேட்டிருந்தேன். இதை எழுத எனக்கு உரிமையில்லையா?" என்று கேட்கிறார் சக்கரியா.

கடந்த ஜனவரி நான்காம் தேதி, அமிர்தானந்தமயி பக்தர்களான மத்திய அமைச்சர் ஓ. ராஜகோபால், கேரள முன்னாள் முதல்வர் கருணாகரன், கேரள அமைச்சர் டி.எம். ஜேக்கப் ஆகியோரைக் கொண்டு திருவனந்தபுரத்தில் ஒரு கூட்டம் நடந்ததாம். இதில் சக்கரியாவுக்கு எதிராகப் பிரசாரம் நடந்ததாகவும், எச்சரிக்கை விடுக்கப்பட்டதாகவும் கூறுகிறார்கள்.

"நான் நாத்திகனில்லை; மதச் சார்பின்மையைக் கடைபிடிப்பவன். நியாயத்தை, நீதியை, எழுத இங்கு எழுத்துச் சுதந்திரம் இருக்கிறதா இல்லையா? மதப் பிரச்னைகள் நாட்டை வேட்டையாடிக் கொண்டிருக்கும்போது அதைப் பார்த்துக் கொண்டு சும்மா இருக்க முடியாது. எதிர்க்கத்தான் வேண்டும். அவ்வாறு எதிர்க்கிறபோது எனக்கு வருவது போல, மதச்சார்பின்மையைக் கடைபிடிக்கிற எல்லோருக்கும் மிரட்டலும் எதிர்ப்பும் நிச்சயம் வரும்" என்கிறார்.

"அமிர்தானந்தமயி பாக்கியவதியும், நிர்பாக்கியவதியும்' என்ற இவரது கட்டுரைத் தொகுப்புதான் இந்தப் பிரச்னைக்குக் காரணமா?"

"நான் எழுதிய பல கட்டுரைகளின் தொகுப்பு அந்த நூல். அமிர்தானந்தமயி பற்றி நான் எழுதிய கட்டுரையின் தலைப்பையே அந்தத் தொகுப்புக்கும் வைத்து விட்டார்கள். கல்லூரிகள், கோயில்கள், உதவிகள் என்று அந்த 'அம்மா' வேறு ஒரு பக்கம் சென்று கொண்டிருப்பதால் மீடியா அவரை

-பால் சக்கரியா

நெருங்க பயப்படுகிறது. அவர் இடும் கட்டளைகளை நிறைவேற்ற உணர்ச்சியிருந்த பெருங் கூட்டம் ஒன்று காத்திருக்கிறது. குஜராத்தில் இஸ்லாமியர்களைக் கொல்ல ஒரு படை புறப்பட்டது போல, கேரளத்தில் இந்தக் கூட்டத்தை ஆர்.எஸ்.எஸ்., சங்க் பரிவாரைச் சேர்ந்தவர்கள் நிச்சயம் பயன்படுத்திக் கொள்வார்கள். இதன் மூலம் கேரளாவில் வகுப்பு மோதலை உருவாக்கவும் தயங்க மாட்டார்கள்.

''கமலா சுரைய்யா, பாலச்சந்திரன் சுள்ளிக்காடு போன்ற எழுத்தாளர்கள் மதச்சார்பின்மைக்காக இயங்கிக் கொண்டிருக்கிறோம். எங்களை எதிர்க்க முடியாதவர்கள் இது போன்ற அமைப்புகளின் பின்னால் இருந்து கொண்டு தூண்டுகிறார்கள். அவர்கள் மூலமாக எங்களுக்கு மிரட்டல் விடுக்கிறார்கள். நாங்கள் தனிமனிதர்கள். அவர்களால் எங்களுக்கு எதுவும் நடக்கலாம். நாங்கள் என்ன செய்ய முடியும்?'' என்கிறார் சக்கரியா.

**நா**வல், சிறு கதை, கட்டுரை என்று இவர் எழுதினாலும் சர்ச்சை தான்!

''இயேசுவும் கண்ணாடியும்' என்ற அவரது நாவலில், கடவுளின் அவதாரமாகப் பார்த்த இயேசுநாதரை ஒரு சாதாரணக் குடும்பத்து உறுப்பினராக்கியிருக்கிறார் சக்கரியா

இதே போல்தான் 'இதுதான் என் பெயர்' நாவலும். காந்தியைச் சுட்டுக் கொன்ற கோட்சேவின் பார்வையில் எழுதப்பட்ட நாவல். கோட்ஸேவின் மன ஓட்டத்தை வேறு தளத்திலிருந்து நாவலாக்கியிருக்கிறார்.

இந்த நாவல்கள் சர்ச்சையைக் கிளப்பியிருந்தாலும் எந்தவித மிரட்டலும் வந்ததில்லையாம்!

''**நா**ன் தமிழகத்தில் பல கோயில்களுக்குச் சென்றிருக்கிறேன். திருவண்ணாமலைக் கோயிலுக்கு என் இஸ்லாமிய நண்பருடன் சென்றேன். அவரது பெயருக்கும் என் பெயருக்கும் அர்ச்சனை செய்தோம். நண்பர் இஸ்லாமியர் என்றோ, அவருக்கு அர்ச்சனை செய்யமாட்டோம் என்றோ அர்ச்சகர் சொல்லவில்லை. ஆனால் குருவாயூர் கோயிலில் இது முடியுமா? தெய்வத்தின் பெயரால் மதமாச்சர்யங்களை விதைக்காதீர்கள் என்றுதான் சொல்கிறேன். இந்தக் கருத்தை கதைகளாகவோ, பத்திரிகைகளின் கருத்துக்காகவோ நான் எழுதுகிறேன். இதில் என்ன தவறு இருக்க முடியும்? பி.ஜே.பியையும் ஹிந்துத்துவாவையும் ஏன் எதிர்க்கிறீர்கள் என்று கேட்கிறார்கள். மூடத்தனமான எந்தக் கொள்கையையும் நான் எதிர்க்கிறேன். பொதுவாழ்வில் மதத்துக்கோ, மதம் சார்ந்த அமைப்புக்கோ எந்த வேலையுமில்லை. நீங்கள் கடவுளை நம்புகிறவராயிருந்தால், அது உங்களுக்கும் கடவுளுக்கும் சம்பந்தப்பட்ட தனி விஷயம். உங்கள் நம்பிக்கையை மற்றவர்கள் மேல் திணிப்பதும், அவர்கள் அதன்படி நடக்க வேண்டும் என்று கட்டாயப்படுத்துவதும் பெரிய மூடத்தனம்.'

— செ. ஏக்நாத்

படம்: - நன்றி: ஆனந்த விகடன்



## புக் பேங்க்

"அஜய் முகர்ஜியின் அரசு 1970ல் கவிழ்ந்து, மேற்கு வங்கத்தில் பொதுத் தேர்தலுக்கு ஆணையிடப்பட்டிருந்த நேரம். நான் மாநிலத்தில் முக்கிய தேர்தல் அதிகாரியாக இருந்தேன். தேர்தல் பிரசாரக் கூட்டங்களில் ஜோதி பாசு, அரசு அதிகாரிகளையும், ஊழியர்களையும், காவல் துறையினரையும் பயமுறுத்தும் விதமாகப் பேசினார் என்று பத்திரிகைகளில் செய்திகள் வெளியாயின. "அச் செய்திகள் உண்மையானால், உங்கள் பேரில் ஏன் நடவடிக்கை எடுக்கக் கூடாது?" என்று விளக்கங் கேட்டு நோட்டீஸ் அனுப்பினேன். அற்பமான அரசியல்வாதிகள் போலல்லாமல் விரிவான பதிலை அனுப்பி வைத்ததுடன், என்னை அலுவலகத்திற்கே நேரில் வந்து சந்தித்து விளக்கமும் அளித்து விட்டுப் போனார் ஜோதி பாசு.




# மரபுகளைப் பாதுகாப்பவர்கள் இடதுசாரிகள்!

இன்றைய நிலையிலும் கூட, பழங்காலப் பண்புகளையும், மரபுகளையும் பாதுகாத்துக் கொண்டிருப்பவர்கள் இடது சாரி அரசியல்வாதிகள்.

ஒரு நாள் சி.பி. ராமஸ்வாமி அய்யர் என்னை அவருடைய வீட்டுக்குக் கூப்பிட்டனுப்பினார். "ராகவன், எனக்கு ஒரு யோசனை தோன்றுகிறது. நாடாளுமன்றத்துக்கும், சட்டசபைக்கும், தேர்தலில் நின்று வெற்றி பெற்ற ஒவ்வொருவரும், நாட்டின் ஒற்றுமையையும் இறையாண்மையையும் பாதுகாப்பேன் என்று பிரமாணம் எடுத்துக் கொள்ள வேண்டும் என அரசியல் சட்டத்தில் திருத்தம் கொண்டுவர பரிந்துரைத்தால் என்ன?" என்று கேட்டார். இப் பரிந்துரை சட்டமாகி விட்டால், பிரிவினை மனப்பான்மையுள்ள அனைவரும், வேட்பாளர்களாக ஆவதிலிருந்தும், மக்கள் பிரதிநிதிகளாவதிலிருந்தும் தடுக்கப்படுவார்கள். நாட்டின் ஒற்றுமையையும், இறையாண்மையையும் மதிக்காத கட்சிகளும் உருக்குலைந்து போய்விடும். நேரு அரசியல் சாசனத் திருத்தத்தை ஒப்புக் கொள்ளவும், அது ஒருமனதாக அப்போதிருந்த சூழ்நிலையில் எல்லாக் கட்சிகளாலும் ஏற்கப்பட்டு விட்டது."

— பா.ஸ்ரீ. இராகவன் ஐ.ஏ.எஸ். எழுதிய 'நேரு முதல் நேற்றுவரை' நூலிலிருந்து.
கலைஞன் பதிப்பகம், 19 கண்ணதாசன் சாலை, தி. நகர், சென்னை - 600 017
280 பக்கங்கள். விலை ரூ. 110/-

— சாரு

# லண்டனில் மணி அடிக்கிறார்!

நெருப்புக் கோழியின் இறகுகள் பதிக்கப்பட்ட தொப்பி, பளபளக்கும் சிவப்பு நிற பிரத்யேகமான உடை, வெள்ளை நிற பாண்ட், கறுப்பு நிற பூட்ஸ். கையில் ஒரு மணி, இவர்தான் பீட்டர் மூர்.

நம் கிராமங்களில், தமுக்கு அடித்து அறிவிப்பார்களே, அதுபோல, லண்டன் மாநகரத்தில், ஒரு மணியை அடித்து அறிவிப்பதுதான் இவர் வேலை!

புராதனமான அறிவிப்புப் பணியைச் செய்து வரும் பீட்டர் மூரை, இன்றைய உலகின் நவீன தகவல் தொடர்பு தொழில் நுட்பமான இன்டர்நெட் சேவை விளம்பரத்துக்காக, இந்தியாவுக்கு வரவழைத்திருந்தார்கள் 'ஐ வே' என்ற பெயரில் இன்டர்நெட் சேவை அளித்து வரும் சத்யம் நிறுவனத்தினர்.

ரொம்ப ஜாலியாகப் பேசுகிறார் மூர். ''பிரிட்டனுக்கும், பிரான்சுக்கும் இடையே, ஹேஸ்டிங்ஸ் யுத்தம் 1066ம் ஆண்டு நடந்தபோது, முதல் அறிவிப்பு செய்ய இந்தப் பதவி உருவாக்கப்பட்டது. நான் அறிவிப்பின் துவக்கத்தில் கூறும் 'ஒயிஸ்.. ஒயிஸ்...' என்ற வார்த்தைகூட, 'கவனியுங்கள்' என்ற பொருள் கொண்ட பிரெஞ்ச் வார்த்தைதான்! வரும் ஏப்ரலில் நான் கால் செஞ்சுரி போடப் போகிறேன். நான் செய்யும் வேலை ரொம்ப இன்ட்ரஸ்டிங்காக இருக்கிறது.

''லண்டன் மாநகர மேயரின் அறிவிப்பாளர்தான் நான். என் உடை, இங்கிலாந்து ராஜ குடும்பத்து உடை தைப்பவர்களால் தைக்கப்படுகிறது. என் கையில் உள்ள மணி பதினோரு பவுண்டு எடை கொண்டது. லண்டன் மாநகரின் முக்கியப் பகுதிகளில் நின்று கொண்டு, அந்த இடத்தின் மேன்மையை டூரிஸ்ட்களுக்கு அறிவிப்பது என் தினசரிப் பணி. தவிர, லண்டனுக்கு வரும் அயல் நாட்டு ஜனாதிபதிகள், பிரதமர்களை நான் வரவேற்பேன். அரசு நிகழ்ச்சிகளில், அணிவகுப்புகளை நான்தான் முதலில் நின்று வழி நடத்திச் செல்ல வேண்டும். இளவரசர் வில்லியம்ஸ் பிறந்த சேதியைக்கூட நான் அறிவித்திருக்கிறேன். போப் ஆண்டவர் லண்டன் வந்திருந்த போது, அவரை வரவேற்கும் பெரும்பேறு எனக்குக் கிடைத்தது.

''நான் உலகின் பல நாடுகளுக்கும் சென்றிருக்கிறேன். இந்தியாவுக்கு இது இரண்டாவது தடவை. ஐந்து வருடங்களுக்கு முன் பெங்களூர் வந்திருந்தபோது, அந்த நகர ரோடுகளில், யானை மீது ஏறி வலம் வந்ததை என்னால் மறக்க முடியாது. அதேபோல ஒட்டகத்தின் மீதும், ஹாட் ஏர் பலூனிலும் பயணம் செய்தது இனிய அனுபவங்கள்.''

''இந்தியாவில் பிடித்த விஷயம்?''

''நிறைய. சென்னையில் மிகவும் பிடித்தது சூப்பர் காபி. இந்தத் தடவையும் தாஜ் மகாலைப் பார்க்க முடியவில்லையே என்பதுதான் என் குறை!''

- மௌலி

# ஹாலிவுட் கனவு!

அமெரிக்க மண்ணில், அட்சய பாத்திரமாய் டாலர்களைக் கொட்டுகிறது இவர் தொடங்கிய சாஃப்ட்வேர் திண்ணை. ஆனால் சிங்காரச் சென்னைதான் இவருக்கு அன்னை. இவர் சென்னைக்குப் பறந்து வந்து, தயாரித்த படங்கள் இரண்டே இரண்டுதான் என்றாலும், 'தரமான தயாரிப்பாளர்' என்ற பட்டத்தை இவருக்குப் பட்டா போட்டுத் தந்திருக்கிறது தமிழ் ரசிகர் பட்டாளம். ஆயிரம் வோல்ட் பர்சனாலிட்டியில் பளீரெனப் பேசும் அவர், 'நந்தா', 'மௌனம் பேசியதே' படங்களின் கர்த்தா, கணேஷ் ரகு' தமது வெற்றி ரகசியங்களை அவரே சொல்கிறார்:

''பிறந்து, வளர்ந்ததெல்லாம் சென்னையில். சாதாரண நடுத்தரக் குடும்பத்தில், எட்டுக் குழந்தைகள்ல ஏழாவதா பிறந்தவன். குடும்பத்திற்கென்று சொத்துக்களோ, பண பலமோ கிடையாது. முதுகலையில் எம்.எஸ்ஸி. கணக்கியல் சேரத் துடித்தபோது, உனது தகுதிக்கு அதுவே பெரிய படிப்பு என்றார்கள். இந்தப் படிப்பை முடித்து விட்டு அமெரிக்காவில் எம்.பி.ஏ. கனவோடு இருந்தேன். 'முதலில் கனவு காணுங்கள். அதுவே பிறகு எண்ணங்களாகும்... எண்ணம் ஒரு நாள் செயல் வடிவம் பெறும்' என்று அப்துல் கலாம் சொன்னது போல, எனது கனவுகள் எண்ணங்களாகி என்னைப்படுத்திய பாட்டில், அமெரிக்காவில் கால் வைத்து நினைத்ததைப் படித்து முடித்தேன். கல்வி முடிந்த கையோடு, கம்ப்யூட்டர் நிறுவனம் தொடங்க வேண்டும் என்ற கனவின் அடுத்த கட்டத்தை, வெறும் முந்நூறு டாலரில் செயல்படுத்தினேன். இரவு பகல் பாராமல் தூக்கம் தொலைத்த உழைப்பு. இன்று எனது நிறுவனத்தில் நூற்றி ஐம்பது சாஃப்ட்வேர் என்ஜினீயர்கள் இருக்கிறார்கள். பல நாடுகளில் கிளைகள். இருபத்தெட்டு மில்லியன் டாலர்கள் டர்ன்ஓவர் ஆகிறது.

உழைக்க உழைக்க லாபமும் உயர்ந்து கொண்டே போனது. வருமானத்தின் ஒரு பகுதியை வாழ்க்கைக்காகச் செலவிட்டாலும், மற்றொரு பகுதியை ஆத்மதிருப்திக்காகச் செலவிட்டால் என்ன என்ற எண்ணம் கேள்வி கேட்க, அடுத்த கணம், சிறு வயதிலிருந்தே நான் நேசித்த சினிமா நினைவில் பளிச்சிட்டது. அப்போதுதான் 'சேது' படம் பார்த்தேன். யதார்த்தம் வழிந்



தோடிய படம். மேட்டுக்குடி மக்களுக்கு மட்டும்தான் இந்தப் படம் பிடித்திருக்கிறதோ என்ற சின்ன சந்தேகம் எனக்குள். ஆனால் படம் வெளியான எல்லா இடங்களுக்கும் சென்று பார்த்தபோது, சேதுவுக்குக்

பட அதிபர்

**கணேஷ் ரகு**

கிடைத்த மரியாதை சிலிர்க்க வைத்தது. உடனடியாக இயக்குனர் பாலாவை சந்திக்க வேண்டும் என்று தோன்றியது. மறுநாளே சென்னைக்குப் பறந்து வந்து அவரைப் பார்த்தேன். அதன் விளைவுதான் நந்தா!

'நந்தா' படத்தைத் தொடங்குவதற்கு முன் பலரும் பேசினார்கள். புதுத் தயாரிப்பாளர். அமெரிக்கக் கலாசாரத்தைப் பார்த்துவிட்டு வந்தவர்... இவரால் நீலப்படம் மாதிரிதான் சினிமா தரமுடியும் என்று என் காதுபட கமெண்ட் அடித்தார்கள். அதைப் பொய்யாக்கியது எனது முதல் தயாரிப்பு. நந்தா லாபம் சம்பாதித்துக் கொடுக்கவில்லை. ஆனால் பெயரைச் சம்பாதித்துக் கொடுத்தது. என்னைச் சுற்றியிருந்த பலரும் 'இனி சினிமா வேண்டாம்' என்று எச்சரித்தார்கள். 'கம்ப்யூட்டரில் சம்பாதித்து சினிமாவில் விடவா இங்கே வந்தீர்கள்?' என்று திட்டவும் செய்தார்கள். எனக்கோ ரசிகர்கள் மீது அசைக்க முடியாத நம்பிக்கையிருந்தது. நாம்தான் அவர்களைப் புரிந்து கொள்ளாமல் படம் எடுக்கிறோம், என்று துணிச்சலாக அடுத்த முயற்சியில் இறங்கினேன். அதற்கு நான் தேர்வு செய்த இயக்குனர் அமீர்!

நந்தா படப்பிடிப்பில் அமீரைப் பக்கத்திலிருந்து பார்த்திருக்கிறேன். கட்டெறும்பு போல எப்போதும் சுறுசுறுப்பாய்ச் சுற்றிக் கொண்டிருப்பார். வேலையில் ஒரு ராட்சஸத்தனமான வேகம் இருக்கும். இயக்குனரின் மன ஓட்டத்தைப் புரிந்து கொண்டு செயல்படுவதில் கெட்டிக்காரர். படப்பிடிப்புத் தளத்தில் இயக்குனருக்கு எவ்வளவு டென்ஷன் இருக்கும். உதவி இயக்குனர்களைத் திட்டுவது சகஜம். இயக்குனர் டென்ஷனில் ஏதேனுமொரு விஷயத்தை மறந்திருந்தால், அதை நுட்பமாக கவனித்து நினைவு படுத்துவார். இதற்காகவே திட்டுகிற இயக்குனர்கள் உண்டு. "எனக்கே சொல்லித் தர்றியாங்கிற மாதிரி!" எத்தனை முறை திட்டு வாங்கினாலும் அமீர் சளைக்காமல் போய் நிற்பார். அந்த சின்சியாரிட்டியைப் பார்த்துதான், அவருக்கு வாய்ப்புக் கொடுத்தேன். அதுதான் 'மௌனம் பேசியதே' படம். அதிகம் பேசாத அமீர், தனது படத்தைப் பேச வைத்து விட்டார்.



எதிர்பார்த்ததை விட பெரிய அளவில் வெற்றியடைஞ்சிருக்கு. கிட்டதட்ட முப்பத்தைந்து பத்திரிகைகளில் படத்திற்கு விமர்சனங்கள் வெளியாயின. பாரதி, அழகி படங்களுக்குப் பிறகு, இந்த அளவு பாராட்டப்பட்ட படம் இதுதான். இந்தப் படம் முடிந்து வெளியிடுவதற்கு முன்பு, முதல் ப்ரிவியூ காட்சியை ஒரு தெலுங்கு தயாரிப்பாளருக்குப் போட்டேன். படத்தைப் பார்த்துவிட்டு, "அடிதடி இல்லை, அல்போன்ஸா டான்ஸ் இல்லை, இடைவேளை முடிச்சு இல்லை, ஃபாரினில் பாட்டு இல்லை. படம் படுத்துடும்" என்று சொன்னார். ஸாரி, தெலுங்கு ரசனைக்கு என்னால் படம் தயாரிக்க முடியாது. பணம் பண்ணுவது மட்டும்தான் நோக்கமென்று நான் சினிமாவுக்கு வரவில்லை என்று அவரை வழியனுப்பி வைத்தேன். படம் வெற்றி பெற்றுவிட்டது என்று தெரிந்த பிறகு அதே தயாரிப்பாளர் இப்போது வந்து தெலுங்கு உரிமைக்காகக் கெஞ்சுகிறார்!

கண் எதிரில் தெரியும் வெற்றியைப் பார்க்க அவர் கற்றுக் கொள்ளவில்லை. அதை முதலில் அனைவரும் கற்றுக் கொள்ள வேண்டும். எந்தத் துறையிலும் 'செய்வன திருந்தச் செய்தால்' தீர்க்கதரிசனம் எல்லோருக்கும் வசப்படும். தமிழ் சினிமாவுக்குள் நுழையத் துடிக்கும் இன்றைய இளைஞர்களுக்கு, ஹாலிவுட்டிற்கு இணையாகப் படமெடுக்க வேண்டும் என்ற ஆசையும் இலட்சியமும் நிறையவே இருக்கிறது. அதற்கு ஈடு கொடுக்கும் விதமாக, தமிழில் ஒரு ஹாலிவுட் முயற்சியைச் சாதித்துக் காட்டுவேன்..." என்று அடுத்த கனவைக் காண ஆரம்பித்து விட்டார் கணேஷ் ரகு!

— ஸ்ரீ சக்கரம்

படங்கள்: டிஜிட்டல் சண்முகம்

# பட்டினிச் சாவே நிகழவில்லை என்கிறாரே முதல்வர்...?

● **கருப்பம்புலம் சித்திரவேலு, நெய்விளக்கு.**

? ***எதிர்க்கட்சிகளின் விருப்பப் படியே மதிய உணவுக்குப் பதில், அரிசி கொடுத்து விட்டாரே ஜெயலலிதா...?***

! விவசாயிகளுக்கு உணவுத் திட்டம் குறித்த எதிர்க்கட்சிகளின் கருத்தை ஏற்பதாக வேறு சொல்லியிருக்கிறார்! இந்த அணுகுமுறை நீடித்து, எந்தத் திட்டத்தையும் தொடங்கு முன்பே பல்வேறு தரப்பினரின் கருத்துகளையும் கேட்டறிந்து முடிவுக்கு வந்தால் நல்லாட்சி மலருமே.

● **அஜார், சென்னை - 18.**

? ***'தன் இனத்தவரோடு போரிடுவதைத் தடுக்கின்றன தமிழிலக்கியங்கள். ஆனால், தன்னினத்தவரோடு போரிட வலியுறுத்துவது கீதை. எனவே கீதையை விடத் தமிழிலக்கியங்கள் உயர்ந்தவை' என்று கலைஞர் சொல்லியிருப்பது பற்றி...?***

! இப்படித்தான் அவர் தேவையில்லாது எதையாவது சொல்லிப் பலரது அதிருப்திக்கு ஆளாகிறார். தமிழ் இலக்கியத்தில் அவர் சுட்டிக் காட்டுகிற சூழ்நிலை வேறு; குருக்ஷேத்திரப் போர் நடந்த சந்தர்ப்ப சூழ்நிலை வேறு. அததற்கு ஏற்ப அறிவுரை வழங்கப்பட்டது. ஒப்பிடுவானேன்!



• கனவும் கட்டியமும்!

● **வடமாலவன், வேலூர்.**

? ***சட்டசபை விவாதங்களில் இன்று எத்தனை சதவிகிதம் திருப்தியளிக்கிறது...?***

! பிரச்னைகள் குறித்து உருப்படியான விவாதம் இருந்தால்தானே சதவிகிதக் கணக்கு பார்க்கலாம். இப்போ இருப்பதெல்லாம் தடாலடிதான்; தனி மனிதத் தாக்குதல்தான்!

● **சித வயிரவன், சென்னை — 86.**

? ***உலகக் கோப்பையில் சூப்பர் சிக்ஸுக்குக் கூடப் போகாமல் இந்தியா மண்ணைக் கவ்வ, அதற்குப் பிறகாவது நம் மக்களுக்குக் கிரிக்கெட் வெறி ஒழிந்து, ஒலிம்பிக்ஸில் இடம் பெறும் உருப்படியான விளையாட்டுகளில் ஆர்வம் காட்ட ஆரம்பிப்பார்களா...?***

! எத்தனை குரூரமான தப்புக் கணக்கு போடுகிறீர்கள்! கிரிக்கெட் ஆர்வமாவது குறையவாவது!

• சோறும் செய்தியும்!



• தகர்ந்ததும் எழுந்ததும்!



● **ஏ. சுகுமார், காட்டுக்காளூர்.**

? ***தமிழகத்தில் பட்டினிச் சாவு ஏதும் இல்லை என்று சட்ட சபையில் ஜெ. ஒரே போடாகப் போட்டு விட்டாரே...?***

! பத்திரிகைகள் மீது நம்பிக்கை வைக்காதவர், செய்திகளை நம்பவா போகிறார்!

● **எம். சரவணன், பெரம்பூர்.**

? ***நாட்டைத் திருத்த கடவுள் பூமிக்கு வந்தால், எந்த மாநிலத்தில் காலடி எடுத்து வைப்பார்...?***

! முதல் அடி காஷ்மீரில்; இரண்டாவது கன்யாகுமரியில். அப்புறமென்ன? நாடே திருந்தி விடாதா! (எப்படி சமாளித்தேன் பார்த்தீங்களா...?)

● **சு. சக்திவேல், சென்னை - 78.**

? ***விண்வெளி வீராங்கனை கல்பனா சாவ்லா மறைவு குறித்து...?***

! நிலவுக்குச் செல்ல கனவு கண்ட பெண் சூரியன் அஸ்தமித்து விட்டது. அளப்பரிய வருத்தம் ஒரு பக்கம் என்றாலும், அமெரிக்கர்களுக்கே உரிய முறையில் நடக்கின்ற ஒளிவு மறைவு அற்ற ஆத்ம பரிசோதனைகளும், விபத்துக்கான காரணம் பற்றிய விவாதங்களும், புதிய சூர்யோதயங்களுக்குக் கட்டியம் கூறுகின்றன.

● **கே. கணேசன், சென்னை - 5.**

? ***புதிய வீராணம் திட்டத்தைத் துவக்குவதற்கு ஜெயலலிதா சென்றபோது, கடலூரில் விளக்கு கம்பங்களுக்குப் பச்சை பெயின்ட் அடிக்கப்பட்டதாமே?***

! அழைப்பிதழ் கூட பச்சை நிறத்தில் அச்சிடப்பட்டது. திட்டம் நிறைவேறினால் பசுமை அப்பகுதி வயல்களில் காணப்படுமா என்று விவசாயிகள் கேட்கிறார்களே!

● **எஸ். சுவாமிநாதன், மன்னார்குடி.**

? ***தனி மனித முன்னேற்றத்துக்குப்***

# நீங்கள் கேட்டவை – தராசு

❑ ரூ. 100/- பரிசு பெறுபவர்:

எம். சரவணன்,
5, சேனத்தம்மன் கோயில் இரண்டாவது தெரு, பெரம்பூர், சென்னை - 600 011

* ரூ. 50/- பரிசு பெறுபவர்:

எஸ். சுவாமிநாதன்,
45, முதல் தெரு,
மன்னார்குடி - 614 001

---

*பெரிய தடையாய் இருப்பது எது..?*

! நெகடிவ் எண்ணங்கள்தான்! சந்தேகமிருந்தால் புத்தகப் பதிப்பாளர்களைக் கேளுங்கள். 'மைன்ட்' பற்றி எத்தனை புத்தகங்கள் போட்டாலும் விற்றுத் தீர்க்கின்றதாமே..!

● **மல்லிகை மன்னன், மதுரை - 17.**

**? அருணாசலக் கவிராயர், மாரிமுத்தா பிள்ளை போன்ற தமிழிசைவாணர்களின் பிறந்த நாள் விழாக்களைத் திருவையாறு ஆராதனைக்கு இணையாக தி.மு.க. கொண்டாடும் என்று கருணாநிதி அதிரடி அறிவிப்பு வெளியிட்டிருக்கிறாரே தலைவா...?**

! இந்த அறிவிப்பு வேறு யாரைக் காட்டிலும் திருவையாறு தியாகராஜ ஸ்வாமிக்கு மிக்க மகிழ்ச்சி அளிக்கும். கவிராயரின் ராம நாடகக் கீர்த்தனைகளில் அவர் உருகிக் கண்ணீர் விட்டதாகச் சொல்வார்கள்.

● **கே.எம். ரவிச்சந்திரன், மதுரை - 20.**

**? பண்டரிபாய் மறைவு...?**

! 'தாயில்லாமல் நானில்லை' என்று எம்.ஜி.ஆர். பாட, 'தெய்வமே தெய்வமே' என்று சிவாஜி உருக, 'அம்மா என்றழைக்காத உயிரில்லையே' என்று ரஜினி நெகிழ... அவர் பண்டரி பாய் அல்ல... பண்டரி தாய்!

● **பி. ஜெயப்பிரகாஷ், சர்க்கார்பதி.**

**? 'அஜய் ஜடேஜா' மீண்டும் இந்திய அணியில் சேரும் வாய்ப்பு உண்டா சார்....?**

! ஊஹூம். இப்போதைக்கு முட்டுக்கட்டைகள்தான் முளைத்துக் கொண்டிருக்கின்றன. அதுவும் அதிகார பூர்வமாக!

● **எல்.ஆர்.ராஜாமணி, பெங்களூர் - 75.**

**? 'கல்கியின் பொன்னியின் செல்வனைப் படித்த பிறகு யாருக்கும் எழுதத் தோன்றாது. ஆனால், சுஜாதா எழுத்தைப் படித்தால் ஒரு துணிவு வருகிறது' என்கிறாரே மதன்...?**

! 'கல்கி'யைப் படித்து பிரமிப்பிலே ஆழ்ந்தவர்களுக்கு எழுதத் துணிவு வராது என்ற கருத்தில் கூறியிருக்கிறார். ஆனால் 'கல்கி' கம்பனைப் படித்து பிரமித்தவர்தான்; ஷேக்ஸ்பியரைப் படித்து வியந்தவர்தான். இன்னும் பல உயர்ந்த உன்னத இலக்கியங்களை ஆழ்ந்து படித்து ரசித்தவர்தான். அதனால் எழுதாமலா இருந்து விட்டார்? அது போன்று நாமும் பிரமிக்க வைக்கும் இலக்கியப் படைப்பை உருவாக்க வேண்டும் என்ற ஆர்வமும், தன்னம்பிக்கையும், உழைப்பும் ஒன்று சேர வேண்டும்.



• பிரமிப்பும் படைப்பும்!

• இலக்கியமும் விளக்கமும்!

# யாரிடம் சொல்வேனடி தோழி!

6

‘டிங்... டிங்... டிங்ங்ங்...’

பள்ளிக் கூட மணியோசையும், அதைத் தொடர்ந்து குழந்தைகள் குதூகலத்தோடு வெளியேறி, கூச்சலிட்டபடியே வீட்டை நோக்கி ஓடுவதையும் பார்த்தபடி நின்றாள் அஞ்சலி.

“டீச்சர் கிளம்பலீங்களா...?”

சத்துணவு ஆயா கேட்க,

“இதோ.. கிளம்பணும்மா...” என்றாள்.

“ஏங்க... டீச்சர். காலைலேர்ந்தே என்னவோ மாதிரி இருக்கீங்க..? ஒடம்புக்கு சொகமில்லையா..?” ஆயா மெலிதான சங்கடத்துடன் கேட்டார்.

“அதெல்லாம் ஒண்ணுமில்ல...” என்று சொல்லும்போதே, மனசுக்குள் சுந்தர் பற்றிய நினைவுகள் மேலெழுந்தன.

காலையிலிருந்தே உள்ளுக்குள் மருகிக் கொண்டிருந்தாள். ‘யாரிடம் விசாரிப்பது...? என்னவென்று கேட்பது...?’

பள்ளிக் கூடத்தின் வழக்கமான வேலைகளுக்குள் மூழ்கி, சுந்தர் பற்றிய எண்ணங்களைச் சற்றே மறந் திருந்தவளுக்கு, ஆயா கேட்டது மறுபடியும் நினைவூட்டியது போலாகிவிட்டது.

‘என்ன செய்வது..?’ யோசித்தவளுக்கு, பொறி தட்டியது.

“ஆயா...” என்றாள்.

“என்னங்க... டீச்சர்..?” என்று வந்தார்.

“ஊர்ல தண்ணீர் தொட்டி கட்டினாங்கள்ல... அந்த வேலை முடிஞ்சிருச்சா...?”

“அது முடிஞ்சு ரெண்டு நாளாச்சேம்மா. வேலையாளுங்க



கூட போய்ட்டாங்க. யாரும் இங்க இல்ல..' சொல்லிவிட்டு, சமையலறையைப் பூட்டப் போய் விட்டார் ஆயா.

# அ. வெண்ணிலா

அஞ்சலிக்கு உடம்பே கொதித்தது.

'என்ன மனுசன் இவன்..? கடந்த மூன்று மாதமாக விடுமுறை தவிர்த்த மற்ற எல்லா நாட்களிலும் தினமும் பேசிக் கொண்டே வந்தவன், திடீரென சொல்லிக் கொள்ளாமல் கூட நின்றுவிட எப்படித்தான் மனசு வந்ததோ...?'

மனம் குமைந்தது. காலுக்குக் கீழே பூமி மெல்ல மெல்ல அவளை உள்ளிழுத்துச் செல்வதைப் போலிருந்தது.

நடக்க நடக்கக் கூடவே அவனும் நடந்தான். சட்டென நின்று பக்கவாட்டில் பார்த்தாள். யாருமேயில்லை.

'இது என்ன பிரமை..! ச்சே..!'

மறுபடியும் நடந்தாள். கால்களை யாரோ பூமியோடு சேர்த்து இறுக்குவதும், பின் டக்கென விலக்கிக் கொள்வதுமாக இருந்தது.

'என்னாயிற்று எனக்கு...? எப்போதுமில்லாத இந்தத் திடீர் மாற்றங்கள் ஏன்... எதனால்...!?'

ஒன்று மட்டும் உணர முடிந்தது. இந்த மூன்று மாதங்களில் சுந்தர் இல்லாமல், இவள் மட்டும் தனியாய் ஒரு நாளும் இப்படி நடந்து வந்ததேயில்லை.

'அப்படின்னா, இந்த மாற்றங்களுக் கெல்லாம் காரணம் சுந்தர்தானா..? யார் அவன்..? தினமும் வரும் வழியில் சந்தித்துப் பேசிய சக பயணி. கூடவே கொஞ்சம் அன்பும், பகிர்வும். அவ்வளவுதானே..? இது வெறும் நட்புதானே..! பிறகு ஏன் சந்திக்காதபோது இப்படியான தவிப்பு...?'

தூரம்தூரமாய்க் கால்களை எட்டி வைத்து நடந்தாள்.

'முடியும்..! சுந்தர் வராமல் என்னாலும் தனித்து நடக்க முடியும். அவனும் வந்தால் பேசிக் கொண்டு வரலாம். இல்லாவிட்டா லென்ன, இருக்கவே இருக்கிறது, பட்டாம்பூச்சியும், தும்பியும், கூழாங்கற்களும்... விளையாடிக் கொண்டே வரலாமே...!'

நிறையவே சமாதானப்படுத்திக் கொண்டு நடந்தாள். குனிந்தபடியே பேருந்து நிறுத்தம் வந்தவள், நிமிர்ந்ததும் பெரிதாய் அதிர்ந்தாள்.

சுந்தர் நின்றிருந்தான். தலைமுடி கலைந்து, முகம் சோர்ந்தபடி வாட்டமாயிருந்தான்.

எதுவும் பேசாமல் நின்றாள்.

இவர்கள் இருவரைத் தவிர வேறு யாருமேயில்லை. லாரி ஒன்று அதிர அதிர சப்தமெழுப்பிக் கொண்டு கடந்து போனது.

"என் மேல கோபமா..?" என்றான்.

அவனையே உற்றுப் பார்த்தாள்.

"உங்க மேல நான் எதுக்குங்க சார் கோபப்படணும்?" என்றாள்.

தலைகுனிந்து கொண்டான் பேசவில்லை.

"என்ன சார் மௌனமாயிட்டீங்க...?" அஞ்சலி கேட்க, நிமிர்ந்தவனின் கண்கள் கலங்கியிருந்தன.

"... என்னாச்சு...?" பதற்றமானாள்.

பல்லைக் கடித்து, பொங்கிய அழுகையை மென்றான்.

குரலைக் கனைத்துக் கொண்டு, தயக்கமேதுமில்லாமல் பேசினான்.

"நீங்க என்ன வேணாலும் நெனைச்சுக்கங்க. இந்த மூணு நாளா உங்களைப் பாக்காம எனக்கு என்னவோ மாதிரி ஆயிருச்சு. சரியானத் தூக்கங் கூட இல்லீங்க...!" மெலிதாய்ச் சிரித்தான்.

"அவ்வளவு பிரியமா இருக்கிறவங்க, இப்படி



## பதற்றம்

- மெல்ல மெல்ல
படியேறி வந்தும்
நீ மூச்சு வாங்குவதை
பற்றிய பதற்றம்
துளியுமின்றிப் போகிறார்கள்
பொறுப்பற்ற உனது சகாக்கள்.

- யாரையும் எதையும்
சபித்தறியா மனசு
சட்டெனச் சபிக்கிறது
மின்சார லிப்டை.

சொல்லாமக் கூட நின்னுர்றது சரியா...?" அஞ்சலி கேட்பதற்காகவே காத்திருந்தவன் போல் சொன்னான்.

"தப்பு தான். ஆனா, தவிர்க்கவே முடியலே. திடீர்னு மாமா கான்ட்ராக்ட் விஷயமா திருநெல்வேலிக்குப் போகணும்னு ராத்திரியோட ராத்திரியா கிளப்பி அனுப்பிட்டாரு. நானும் மறு நாள் போறதா சொல்லிப் பாத்தேன். போனதும் வேலைய முடிச்சிட்டு, உடனே கிளம்பிடலாம்னு சொல்லி அனுப்பிச்சாரு. அங்கே போனா, வேலை முடிய இன்னமும் ரெண்டு மூணு நாளாகும் போல இருந்துச்சு. மாமா என்னடான்னா, எத்தனை நாளானாலும் பரவாயில்லை, இருந்து வேலைய முடிச்சிட்டுத்தான் வரணும்னு சொன்னாரு. இப்பக் கூட இன்னும் வேலை முடியல..." படபடவென நடந்தவற்றைச் சொன்னான்.

"சரி... வேலை முடியாம எப்படி வந்தீங்க...?"

அஞ்சலியின் கண்களை நேராய் கவனித்தான். சொல்லத் தயங்குவது தெரிந்தது. தலையை மெலிதாய் ஆட்டினாள்... 'சொல்லுங்க' என்பதுபோல்.

"வேலையே வேண்டாம்னு வந்துட்டேன்..."

அஞ்சலிக்கு என்ன சொல்வதென்று தெரியவில்லை.

"இந்த வேலை இல்லாட்டி இன்னொரு வேலை தேடிக்கலாம். ஆனா, உங்களைப் பார்க்காம என்னால இருக்க முடியலே...!"

சுந்தர் சொல்லச் சொல்ல, அஞ்சலியின் கண்களும் ஈரமாயின.

'ஏன் இப்படியாகிப் போனோம்?'

கேள்விகளை மௌனமாக்கியபடியே நின்றார்கள்.

பனியைப் போர்த்திக் கொண்டிருந்தது மலை. கூடையைத் தலையில் சுமந்து கொண்டிருக்கும் ஒரு பெண் போல, ஒற்றைக் கல், மலையின் இடது ஓரமாய் தனித்து நின்றிருந்தது.

சின்ன வயதில் அந்தக் கல்லைப் பார்த்து, தயிர்க்காரி, குழந்தையைத் தூக்கிக் கொண்டு ஓடிவிடும் பூச்சிக்காரி, மலைக்கு வருபவர்களை வசியம் போட்டு விடும் மந்திரக்காரி... என என்னென்னவோ கற்பனைகளில் தன் வயதொத்த பையன்களுடன் பேசிக் கொண்டிருந்ததெல்லாம் நினைவுக்கு வந்தது சுந்தருக்கு.

சிறு வயதில் விளையாட பையன்கள் கிடைத்துவிட்டால், இந்த மலைக்குத்தான் ஓடி வருவார்கள். அம்மாவுக்கு மலைக்குப் போன செய்தி தெரிந்தாலே போதும்.. திட்டித் தீர்த்து விடுவாள்.

"ஒனக்கு வெளையாட வேற எடமே இல்லியா..? அந்த மலைப் பக்கம் போகாதேன்னு எத்தன தரம் சொல்றது...?"

திட்டோடு சேர்த்து ஓரிரு அடிகளும் கிடைக்கும். மலையிலிருந்து விழுந்து செத்துப் போனவர்களின் ஆத்மா எல்லாம் ஆவியாகவே இன்னும் இந்த மலையைச் சுற்றி அலைந்து கொண்டேயிருப்பதான நம்பிக்கை அம்மாவுக்கு.

மலையும், செம்மண் பாதையும் எப்போதும் சுந்தருக்கு நெருக்கமான ஒன்றாகவே அமைந்துவிட்டது. இப்போது கூடுதலாகப் பகிர்ந்து கொள்வதற்கு அஞ்சலியும் கிடைத்துவிட்டதில், மலையடிவாரங்களிலும், செம்மண் பாதைகளிலும் இருவரது பேச்சுகளும் குவிந்து கிடப்பதான எண்ணம் மேலிட்டது.

குன்றின்மீது அமர்ந்திருந்தவன் பார்வையைத் திருப்பினான். அஞ்சலி அவனருகே வந்தாள்.

"என்ன, ரொம்ப நேரமா காக்க வச்சிட்டேனா..?" என்றாள்.

"இல்ல... இப்பத்தான் வந்தேன்...!" என்றான்.

பக்கத்திலேயே இருந்த சிறு குன்றில்

சாய்ந்தபடி உட்கார்ந்தாள்.

"இந்த இடத்துக்கு எப்ப வந்தாலும், என்னோட சின்ன வயசு ஞாபகங்கள மறக்க முடியலை..." சுந்தர் சொல்ல,

"என்ன மலரும் நினைவுகளா...?" சிரித்தாள்.

"ஆமா..." தலையாட்டினான்.

"சரி... நேத்து நான் ஒரு கவிதை தந்தேனே படிச்சீங்களா...? எதுவுமே சொல்லலை." அஞ்சலி கேட்டதும்.

"ஓ... அப்பவே படிச்சிட்டேனே...!" என்றவன், பையில் கைவிட்டு, அந்த கவிதைத் தாளை எடுத்தான்.

மீண்டும் ஒருமுறை வாசித்தான். மெலிதாய்ப் புன்னகைத்தான்.

"படிச்சிட்டு சிரிச்சா... என்ன அர்த்தம்...?" என்றாள்.

"கவிதை ரொம்ப நல்லாயிருக்குன்னு அர்த்தம். குறிப்பா இதுல வர்ற... 'நட்பின் விளிம்பு தாண்டி, அன்பில் விழுகிற நீ நீயல்ல.. நான்'னு நீங்க எழுதியிருக்கிற வரி ரொம்பப் பிடிச்சிருக்கு. எனக்கென்னவோ இதை வெறும் கவிதையா மட்டும் உணர முடியலே. அதுக்கும் மேல." சுந்தர் நிறுத்த.

"சொல்லுங்க... அதுக்கும் மேலே...?"

"நம்மோட வாழ்க்கையையே இந்தக் கவிதை வழி பிரதிபலிக்கிறதா நான் உணர்றேன்...!"

"அப்பாடி... இப்பவாச்சும் புரிஞ்சிக்கிட்டீங்களே...!" பெருமூச்செறிந்தாள் அஞ்சலி.

இருவரின் பார்வையிலும் தீட்சண்யம் மின்னியது.

"சுந்தர்... உங்க மேல எனக்கிருந்த அன்பும், நட்பும் காதலா மாறிட்டதா நான் உணர்றேன்..." அஞ்சலி சொல்ல, சுந்தர் பரவசமானான்.

"என் மனசில இருக்கிறதைத்தான் நீங்களும் சொல்றீங்க!"

இருவரிடமும் அமைதி நிலவியது. பாறை இடுக்குகள் வழியாக நூல் போல் ஓடிக் கொண்டிருந்த நீரில், பறவையொன்று வந்தமர்ந்து நீரைக் கொத்தியது. சின்ன அலகில் எவ்வளவு நீரெடுத்து, எவ்வளவு தாகம் தணியுமோ...? அலகில் சிக்கிக் கொள்ளாமல் நீர் நெளிந்தோடியது.

"எனக்கென்னவோ நம்ம எண்ணம் போலவே வாழ்க்கை அமையுமாங்கிற லேசான உறுத்தல் இருந்துக்கிட்டே இருக்கு... அஞ்சலி." என்றான் மெலிதான குரலில்.

"அந்த உறுத்தல் தேவையேயில்லை. நாம ரெண்டு பேரும் பரஸ்பரம் ஒருத்தரையொருத்தர் நல்லா புரிஞ்சிருக்கோம். இதுக்கு மேல மனம் ஒத்த வாழ்க்கை அமைய, வேறென்ன தேவைன்னு நினைக்கிறீங்க...?" அஞ்சலி கேட்டாள்.

"நாம எப்படி ஒருத்தரையொருத்தர் புரிஞ்சுக்கிட்டோமோ, அது மாதிரியே நம்ம குடும்பங்கள்லேயும் நம்ம காதலை அங்கீகரிக்கணும். அவங்க சம்மதத்தோடு தான் நம்ம கல்யாணம் நடக்கணும்..."

"அதுல நானும் உறுதியா இருக்கேன் சுந்தர். எப்படியாவது நம்ம வீட்ல ரெண்டு பேரும் பேசி, அவங்களைச் சம்மதிக்க வைக்கணும். நம்ம திருமணங்கிறது நம்மளோட விருப்பமா மட்டுமில்லாம, நம்ம பெற்றோர்களோட விருப்பமாகவும் இருக்கணும். சரியா...?"

புருவம் உயர்த்தி "சரி..." என்றான்.

அஞ்சலி சாய்ந்திருந்த குன்றினருகே இவனும் சாய்ந்து உட்கார்ந்தான்.

இருவரும் முகம் பார்த்து மலர்ந்தார்கள்.

அவனுடைய விரல்களைப் பிடித்துக் கைகளுக்குள் வைத்துக் கொண்டு, அவன் கண்களையே நோக்கினாள். மென்மையும், அன்பும் கலந்து குழைந்திருந்தன. நெஞ்சுக்குள் கனத்த பனிக்கட்டியொன்று உருண்டு புரண்டு வயிற்றை அடைந்தது. உணர்வுகள் மொத்தமும் விரல் நுனிக்குத் திரண்டு வந்தாற்போல் கனத்தன அவளுக்கு.

மெல்ல அவன் விரல்களைப் பிடித்து, நகக் கண்களில் உதடுகளை ஒத்தினாள்.

மலைகள் பனிக்கட்டியாகி உருகத் தொடங்கின.

கோரைப் புற்களுக்குள் பட்டாம்பூச்சியொன்று சுற்றிசுற்றி வட்டமிட்டது. ஆவாரஞ் செடிகளினூடே புகுந்த தும்பிகள் அப்படியே மேலெழுந்தன. காற்றில் வேகம் குறைந்திருந்தது.

ஒவ்வொரு விரலாய் மாறி மாறி உதடு வைத்து, சுண்டு விரலைத் தொட்டதும், நறுக்கென்று கடித்து, அழுத்தி முத்தமிட்டாள்.

நிமிர்ந்து பார்த்தான் சுந்தர்.

வெள்ளை மேகங்களும், மஞ்சள் பறவையொன்றும் சட்டென இடம் மாறின.

(தொடரும்)



# பகல் கனவு பலிக்கக் கூடாதா?

✉ வி. ராம்நாராயண் எழுதிய அட்டைப் படக் கட்டுரை படித்தேன். உலகக் கோப்பை கிரிக்கெட்டில் இந்தியாவின் நிலை தவிர, மற்ற சில அம்சங்களையும் நன்கு அலசியிருந்தார். மேற்கு இந்தியத் தீவுகள் அணியைக் கவர்ச்சிகரமான, அற்புதமான, நட்சத்திர அணி என்றெல்லாம் மிக ஓவராக பாராட்டி எழுதியதின் நோக்கம்தான் என்ன? நமது அணி நிச்சயம் ஜொலிக்கத்தான் போகிறது பாருங்கள்! பகல் கனவு பலிக்கக் கூடாதா என்ன?
மொரட்டுப்பாளையம்,
இரா. வி. சௌந்தர்யா.

✉ வாயைக் கட்டுவதன் மூலம், வயிற்றைக் கட்டி சிறிது உடற்பயிற்சியும் (கலோரி கணக்கில்) செய்தால் ஆரோக்கிய வாழ்வைக் கூட்டலாம் என்பதை ஆதாரத்துடன் சுட்டிக் காட்டி, தொப்பை ஆசாமிகளை உடற் பயிற்சிக்கு உசுப்பி விட்டு விட்டீர்கள்.
தவுட்டுப்பாளையம், அ. காதர் பாட்சா.

✉ 'தூள்' பட விமர்சனத்தில் இசை அமைப்பாளர் பற்றிக் குறிப்பிட மறந்தது ஏன்?
சிதம்பரம், ஸ்ரீவித்யா காளிதாஸ்.

✉ குழந்தைத் தொழிலாளர்களுக்கு ஆதரவாகப் பல அமைப்புகள் பேச்சளவில் மட்டும் செயல்படும்போது, அதை வெற்றிகரமாகச் செயல்படுத்தி அரிய பல சாதனை செய்து வரும் 'சியர்ஸ்' அமைப்புக்கு 'சபாஷ்' போடலாம். அந்தப் பிஞ்சுக் கனவுகள் நனவாக பிரார்த்திப்போம்.
திருவாரூர், எஸ். பாலச்சந்தர்.

✉ தி.மு.க. போன்ற நியாயமுள்ள எதிர்க்கட்சி ஜனநாயகக் கடமையிலிருந்து சறுக்கி விழுவது தவறு என்பதை தலையங்கம் உணர்த்தியது. தேர்தல் முடிவு எப்படி வேண்டுமானாலும், இருந்துவிட்டுப் போகட்டும்! ஆளுங்கட்சியின் மீதான அதிருப்தியைக் காரணம் காட்டி, சாத்தான்குளம் இடைத் தேர்தலைப் புறக்கணிப்பது, ஒரு தரமுள்ள எதிர்க்கட்சிக்கு அழகல்ல!"
திருச்சி - 20, கி. முகம்மது ஹசன்.

✉ 'பகல் கனவு' அபூர்வமாகத்தான் பலிக்கும் என்பார்கள்! 'அத்தைக்கு மீசை முளைத்து சித்தப்பா ஆன மாதிரி' சூப்பர் சிக்ஸில் தகுதி பெற்று, நம்ம அணி இறுதிச் சுற்றுக்கு வந்தாலே, நாம 'உலகக் கோப்பை'யை ஜெயிச்ச மாதிரிதான்!"
திருச்சி – 21,
ஆர். அப்துல் சலாம்.

✉ நட்சத்திரச் சந்திப்பு படு சுவாரசியமாக இருந்தது. மதன் திரைப்பார்வையில், அன்பே சிவம் படத்தை விமர்சிப்பீர்களா? என்ற கேள்விக்கான மதனின் பதில், சிம்ப்ளி சூப்பர்ப்!
பள்ளப்பட்டி,
த. அசாருதீன்

✉ "சாத்தான்குள வைரஸ்" தாக்குதலால் தேர்தல் புறக்கணிப்பு நோய் பீடித்திருக்கும் தி.மு.க.வுக்கு, அருமையான பிரிஸ்கிரிப்ஷனாகத் தலையங்கம் விளங்கியது.
தஞ்சாவூர் – 7,
வளர்மதி ஆசைத்தம்பி.



அரிசி ஆலை நடத்திக் கொண்டிருந்த உதயசங்கர், 'அழகி' படத்தைத் தயாரித்ததன் மூலம் தங்கர் பச்சானுக்கு இணையான புகழ் வெளிச்சத்தில் நனைந்தவர். இப்போது தமது இரண்டாவது தயாரிப்பான 'அன்பை'யும் ஒரே மூச்சில் முடித்து ரிலீஸுக்கு ரெடியாக்கிவிட்டார்.

அழகி! அன்பு! - என்ன மூன்றெழுத்து சென்டிமெண்டா?

"அய்யய்யோ, அதிலெல்லாம் நம்பிக்கையே கிடையாதுங்க... அழகி படம் தொடங்குவதற்கு முன்னாலேயே, இந்தக் கதையைக் கேட்டு ஓ.கே. செய்தேன். தலைப்பைக் கூட முன்பே பதிவு செய்து விட்டோம்" என்கிறார். படத்திற்கு 'இவன் ஒரு காதல் தீவிரவாதி' என்று கேப்ஷன் வைத்திருப்பதைப் பார்த்தால், "அழகியில் இருந்த யதார்த்தம் இதில் இருக்குமா? என்ற சந்தேகம் வருகிறதே" என்றால், "அழகியின் கௌரவத்துக்கு அன்பு ஒரு போதும் களங்கம் விளைவிக்க மாட்டான்" என்று உறுதி தருகிறார்.

ஹாலிவுட் படங்களுக்கு த்ரீ டி அனிமேஷன் செய்யப்போன சென்னை இளைஞர்கள் சரவணன், ராம் இருவரும் இப்போது 'பவளக்கொடி' என்றொரு தமிழ்ப்படத்தை இயக்கிக் கொண்டிருக்கிறார்கள். "நாயகனும் நாயகியும் பள்ளி நண்பர்கள். பள்ளிப் படிப்பு முடிந்ததும் பிரிந்து விடுகிறார்கள். சில வருடங்களுக்குப் பிறகு, நாயகியின் தற்போதைய நிலை என்னவென்று நாயகன் தேட ஆரம்பிக்கிறான். அவனது தேடலின் முடிவை, ஹாலிவுட்டில் கற்றுக் கொண்ட நேர்த்தியான திரைக்கதை மூலம் சொல்லியிருக்கிறோம்" என்கிறார்கள் இந்த இரட்டை இயக்குனர்கள்! இந்தப் படத்திற்காக கதைப்படி ஒரு வட்ட முகத்தைக் கொண்ட நாயகியைத் தேடி அலைந்து, கடைசியில் பவள் என்ற மும்பை மாடலை அழைத்து வந்து விட்டார்களாம்!

* 'அன்பு' - பாலா, திபு



* 'விகடன்'-முரளிகுமார், நாசர், அருண் பாண்டியன்



# மூன்றெழுத்து சென்டிமெண்ட்!

ஜெமினி படத்தில் அனிமல் பிளானெட் சேனலில் வரும் அத்தனை விலங்குகளின் மேனரிசங்களையும் செய்து அசத்திய மலையாளச் சேட்டன் கலாபவன் மணிக்கு, தமிழில் பெரிதாக வாய்ப்பு வரவில்லை. வில்லன் நடிப்பெல்லாம் இனி சரிப்பட்டு வராது என்று முடிவு செய்த மணி, 'பந்தா பரமசிவம்' படத்தில் முழுநீள நகைச்சுவை நடிகராகக் களமிறங்குகிறார். அதாவது ஹீரோ பிரபுவின் வாலைப் பிடித்துக்

கொண்டு படம்
நெடுகிலும் வந்தாலும்,
விவேக், வடிவேலு,
கருணாஸுக்குப்
போட்டியாக,
தனக்கென
நகைச்சுவையைத்
தானே எழுதிக்
கலக்குகிறாராம்!

பின்னணிப்

* 'பந்தா பரமசிவம்' - கலாபவன் மணி, பிரபு



* 'பவளக்கொடி' - பவன்

பாடகர் ஹரிஸ் ராகவேந்திரா 'விகடன்' படத்தில் நாயகனாக நடிப்பது பழைய செய்தி. ஆனால் அவரது தந்தை ஹரிஷ், இந்தப் படத்தில் நாயகி காயத்ரி ரகுராமின் தந்தையாக நடிக்கிறார், என்பது லேட்டஸ்ட் செய்தி.

அதிரடி ஆத்திக எதிர்ப்புப் படங்களை எடுத்து வந்த வேலு பிரபாகரன், இந்தப் படத்திற்கு ஒளிப்பதிவை ஏற்றுக் கொண்டிருக்கிறார்.

தமது 'பெரியார்' மெகா பட்ஜெட் படத்திற்கான கேமரா சோதனை முயற்சியையும் இந்தப் படத்தில் மேற்கொண்டிருக்கிறாராம்.

சென்னைத் திரைப்படக் கல்லூரியில் ஒன்றாக நடிப்பு பயின்ற அருண் பாண்டியன், நாசர், முரளி குமார் மூவரும் இந்தப் படத்தில் இணைந்து நடித்திருக்கிறார்கள்.

— ரவுண்ட்ஸ் பாய்



# போதை

**ஷாராஜ்**

நீங்களே சொல்லுங்கள்; இந்தக் காலத்தில் யாராவது, குறிப்பாக இளைஞர்கள், தண்ணியடிக்காமல் இருப்பதுண்டா? ப்ளஸ் ஒன் பசங்களே திருட்டு தம் அடிக்கிறார்கள். அதுவும் ஸ்கூல் யூனிஃபார்மோடு. கல்லூரிக்குள் வந்துவிட்டால் சிகரெட்டில் தான் மாறுகிறது.

நான் படிக்கிறபோது இதெல்லாம் பழகாமல் ஐந்து வருடங்களை வீணாக்கி விட்டேன். அனுபவிக்காமலே அதில் ஒன்றுமில்லை என முடிவு கட்டி, படிப்பு படிப்பு என்று பாழானேன். படித்து முடித்துவிட்டு ஊரைச் சுற்றிக் கொண்டிருந்த நாட்களில் தான் சிகரெட்டைப் பழகியது. வேலை தேடி அலைந்து ஏமாந்த வருடங்களில் குடியையும்.

எப்படியோ, பல வித வேலைகளும் செய்து, இப்போது தற்காலிக நிரந்தரமாய் ஒரு தனியார் நிறுவனத்தில் மதிப்பான பதவி, கை நிறையச் சம்பளம், மனம் நிறைய சந்தோஷம் என்றாகி விட்டது. அதை அவ்வப்போது கொண்டாடுவேன்.

சொன்னால் நம்ப மாட்டீர்கள். என் அம்மாவுக்கு நான் இப்படிச் சந்தோஷமாக இருப்பது பிடிக்கவில்லை.

எட்டு மாதங்கள் என்னைச் சுமந்து (குறைப் பிரசவத்தில்) பெற்ற தாய்க்கு நான் சந்தோஷமாக வாழ்வது பிடிக்கவில்லை.

''நம்ம பரம்பரையிலேயே இல்லாத கெட்ட பழக்கத்தைப் பழகிட்டயேடா, பாவி...!'' என்று ஆவலாதி.

பேண்ட், சட்டையிலிருந்து லுங்கிக்கு மாறாமல், அப்படியே கட்டிலில் மல்லாந்து கை, கால்களை அகட்டிக்கிடந்த நான் விக்கலைப் போல சிரித்தேன். அம்மாவின் அழுகையோடு என் சிரிப்புமே எனக்கு வினோதமாகத் தெரிந்தது.

தெருவில் தள்ளாட்டம், வாசலில் விழுந்து கிடப்பு, பாத்ரூமில் வாந்தி நாற்றக் கலவைகளோடு மயங்கல், என என் நாட்கள் தண்ணீரில் மூழ்கின. என்னில் நான் மிதந்தேன்.

அம்மா திட்டினாள்; மிரட்டினாள்; என்னுடன் பேசா விரதம் கடைபிடித்தாள். பலிக்குமா என்னிடம்?

அப்பா இவற்றைப் பார்த்துக் கொண்டும் கேட்டுக் கொண்டும் இருந்தாலும், பார்க்காததும் கேட்காததும் போலவே இருந்தார்.

''என்ன பண்ணியும் அடங்காமத் திரியறானே... ஒரு வார்த்தையாவது கேக்கறீங்களா நீங்க?'' என்று அவரைப் பிடித்துக் கொண்டாள் அம்மா.

அப்பா, ''ம்?'' என்றார். சிக்கனமானவர். வார்த்தைகளை விரயமாக்க மாட்டார்.

''அவன் இப்படி தலைக்கு மேல போறதுக்குக் காரணமே நீங்கதான். நீங்க அவனைக் கண்டிச்சாத்தான் ஆகும்? மொட்டை மாடில உக்காந்து ஊதித் தள்றான். கண்ணு மண்ணுத் தெரியாத அளவுக்கு ஊத்திட்டும் வர்றான். பெத்த அப்பனாத்தான்னு கொஞ்சமாவது மரியாதை காட்டறானா? என்னை விடுங்க. உங்களுக்காவது மரியாதை குடுக்கணுமா வேண்டாமா?''

''ம், ம்...!''

''எதுவுமே இல்ல. அக்கம் பக்கத்துல மானம் போகுது. அவன் சொல்லித் திருந்தறதாக் காணோம். கொழந்தப் புள்ளைன்னா அடிச்சுத் திருத்தலாம். இவன என்ன பண்றது? ஏதாவது வழி உண்டான்னு பாருங்க.''

''ம்.''

அப்பா புத்திசாலி. ஆகவே, வீணாக மூளையை உபயோகிக்க மாட்டார்.

கடைசியில் அம்மாவே கண்டுபிடித்து விட்டாள். 'கால்கட்டுப் போட்டாத்தான் சரியாகும்.'

பகலில் இயல்பாகவும் இரவில் தள்ளாடியும் நடக்கிற என் கால்களுக்குக் கட்டா?

''குடிக்காதவன்லாம் கல்யாணத்துக் கப்புறம் குடிகாரனா ஆயிடறான். எனக்குப் பண்ணி வெச்சின்னா நான் பெருங் குடிகாரனா ஆயிடுவேன்'' என்றேன்.

அம்மா மர்மமாகப் புன்னகைத்தாள். இளக்காரம், கேலி, கிண்டல், வஞ்சம், வன்மம், குரூரம் என, பல உணர்ச்சிகள்

# மரம்



கொண்டதாகவும், ஆனால் புரிந்து கொள்ள முடியாததாகவும் இருந்தது அந்தப் புன்னகை.

**பொ**றுப்பற்ற அல்லது தீய சகவாசமுள்ள பிரம்மச்சாரிகளை நெறிப்படுத்த எல்லோருமே கல்யாணத்தைத்தான் பரிந்துரைப்பார்கள்; பயன்படுத்துவார்கள். 99.99 சதவீதம் அது பலனளிக்கவும் செய்யும். தண்ணி வண்டி என நண்பர்களால் குறிப்பிடப்படும் அன்புச் செல்வனே கூட மாறிவிட்டானே!

அவனிடம் விஷயத்தைத் தெரிவித்ததும், "என்னைப் பாத்தாவது திருந்துடா மாப்ள!" என்றான். "கல்யாணத்துல மட்டும் மாட்டிக்காத. தவிச்ச வாய்க்குத் தண்ணி கெடைக்காம நான் லோல்படறன் பாத்தையா?"

இன்னொரு குடும்பஸ்தனான முனீஸ் (முழுப் பெயர் முனீஸ்வரன்), "தாலில போடற மூணு முடிச்சுக்கு அர்த்தம் தெரியுமா சாமீ? நம்மளோட சுதந்திரம், சந்தோஷம், நிம்மதி மூணும் இதோட 'ஹோ...கயா'ங்கறதுக்கு அடையாளம்தான்" என தத்துவம் உதிர்த்தான்.

இவர்கள் படும் பாட்டைத்தான் நானும்

நாளும் பார்க்கிறேனே! அதனால் கல்யாணத் துக்குப் பிடி கொடாமல் இயன்ற வரை தப்பித்து விட்டேன். காலம் முழுக்க அது முடியாது என்பதால், ஒரு கட்டத்தில் இணங்க வேண்டியதாகி விட்டது. ஆனாலும் அதற்காக எனது சுதந்திரத் தையோ, சந்தோஷத்தையோ, நிம்மதியையோ விட்டுக் கொடுக்க நான் தயாரில்லை. கல்யா ணம் பண்ணிக் கொள்ளப்போகிறவளிடம் முன்கூட்டியே அதைச் சொல்லி விடவும் தீர்மானித்தேன்.

**பா**ர்க்கப்பட்ட பெண்களில் பலரும் பல காரணங்களால் ஒத்து அமையாமல் ஆயினர். மாதங்கியைப் பார்த்ததும் என் இதயத்தில் ஃபைவ் தௌஸண்ட் மிதப்பு. கனவு தேவதைகளுக்கு ஒரே மாற்று குறைந் தவள் போலிருந்தாள். உலகின் எந்த மூலைக் கும் போய் அவளோடு நூறு வருஷங்கள் வாழலாம். அந்த இடமே சொர்க்கமாகி விடும்.

நான் இப்படி அவள் வசப்பட்டதை கவனித்து விட்டு, உடன் துணை வந்திருந்த வாசுவும் முனீஸும், "டே, மாப்ள... என்னடா ஃப்ளாட்டாயிட்ட?" எனக் கிசுகிசுத்தார்கள். கட்டுப்படுத்திக் கொண்டேன்.

நாங்கள் கலந்துரையாடுவதைப் பற்றி, "என்னடா?" என்று அடிக்குரலில் கேட்டாள் அம்மா. கவலையும் சந்தேகமுமாக.

''ஒண்ணுமில்லீங்கமா! இவன்,.... பொண்ணு கூடத் தனியாப் பேசணுங் கறான்'' என்று விட்டான் முனீஸ்.

அம்மாவுக்கு ஆசுவாசம்.

''என்னடா ஃபுல்லுக்கு மாட்டிவிட் டுட்ட?'' என்றேன். (இந்த ஃபுல் 720 மில்லி ஃபுல் அல்ல. சீட்டாட்டத்தின் 80 பாய்ண்ட் ஃபுல்).

"பேசாம எப்படிடா பொண்ணு கிட்ட விஷயத்தைச் சொல்ல முடியும்?"

''இல்ல... சொல்லணுமா வேண்டா மான்னு இருக்கு..'' என்று இழுத்தேன். நான் குடியன் என்று சொல்லி இவளை இழக்க நேர்ந்தால்...

வாசு, ''சும்மா கடலையாவது போட்டுட்டு வா'' என்றான்.

**மா**தங்கியுடன் தனிமையில் பேச ஏற் பாடானது. அவளின் அருகாமையில், எதுவும் பேசாமல் நான் முழுக்க நிற்க விரும்பினேன். மௌனம் எங்களிடையே பூத்து மணத்தது. அங்கிங்கென பார்வை யைத் திருப்பியவள் கொஞ்ச நேரம் ஓரக் கண்ணில் முறுவலித்தாள். நான் அதை ரசித்துக் கொண்டிருக்கையில் எதிர்பாராத தாக்குதலாக அவள் என்னை நேரடியாகப் பார்த்தாள். நான் நிலைகுலைந்தேன்.

''பேசணும்னு கூட்டிட்டு வந்துட்டு பேசாம இருந்தா எப்படி?''

குரல் இனிக்குமா? குரல் குளிருமா? ஆம் என்பது எனக்கு அப்போது தெரிந்தது.

நான் தடுமாறிச் சமாளித்து, "பேசணும்னு தான் வந்தேன். ஆனா... இப்ப நீங்க பேசறத மட்டும் கேட்டுட்டே இருக்கணும்னு தோணுது'' என்றேன்.

அவளது புருவம் கேள்வியாய் உயர்ந்து தாழ்ந்தது. ''நல்லாப் பேசறீங்க'' என்றாள். எனக்கு மொழியே மறந்து விடுமாயிருந்தது. மறந்தே தான் போச்சோ... மறுபடியும் மௌனம்.

''சரி... சொல்ல வந்ததச் சொல்லுங்க'' என்றாள்.

சொல்வதா வேண்டாமா என்ற பெரும் போராட்டத்திலிருந்து என் எண்ணங்கள் எப்படி வார்த்தை களாகி வெளிப்பட்டன என்பது எனக்குத் தெரியாது. முழுவதையும் கேட்டுவிட்டு அவள் அமைதியாக, "எனக்குக் குடிக்கறவங்களப் பிடிக் காது'' என்றாள்.

அந்தக் கணத்தில், வாழ்வில் முதல் முறையாக என்னை வெறுத் தேன்.

''எனக்கு எப்ப பணக் கஷ்டம் வந் தாலும் எங்க மாமாகிட்டப் போவேன்...அவர் குடுக்கற லெக் சர்ல பணக் கஷ்டமே தேவலைன்னு தோணிடும்...!''



— எம்.ஆர். மூர்த்தி

மாதங்கியை இனி எதிர்கொள்ள தைரிய மற்றுத் துவண்டு கொண்டிருந்தபோது, "இருந்தாலும் ஏனோ உங்களப் பிடிச்சிருக்கு" என்றான்.

வாழ்வில் முதல் முறையாக என்னைப் பற்றி எனக்குப் பெருமிதம் உண்டானது.

"ஸ்மோக் பண்றதையும் விக்கர் சாப்பிடறதையும் உங்களால விடவே முடியாதா?"

"நான் ட்ரை பண்ணினதில்ல."

"எனக்காகப் பண்ணுவீங்களா?"

அவளுக்காக கொலையே கூடப் பண்ணலாம். இது முடியாத காரியம். இருந்தாலும், "பண்ணிப் பாக்கறேன்" என்றேன்.

அவள் சற்றே வெட்கத்தோடு, "அப்படின்னா... உங்களுக்கு என்னைப் பிடிச்சிருக்கு இல்லயா?" என்று கேட்டாள்.

அந்தக் கேள்வியில், அந்த வெட்கத்தில் அவளது சம்மதமும் புரிந்து, பரமானந்தமானேன். அவள் எனக்கே எனக்கு என்று அப்போதே ஆகிவிட்டது போலவும், இது எப்போதோ நிச்சயிக்கப்பட்டு விட்டது போலவும் உணர்வு. அது வெளிப்படாதபடி மறைத்துக் கொண்டு,

"ம்... கொஞ்சம் அழகா இருக்கீங்க. என் கண்டிஷனுக்கும் கேரக்டருக்கும் ஒத்து வர்றீங்க. அதனால சுமாராப் பிடிக்குது" என்றேன்.

அவள் என்னை கவித்துவமாக முறைத்து என்னவோ முணுமுணுத்தாள்.

பேசப் போனவர்களை இன்னும் காணோமே என்று மாதங்கியின் அயல் வீட்டுப் பெண்மணிகள் எட்டிப் பார்க்கவும் தான் நாங்கள் திரும்பி வந்தோம்.

அப்புறம் என்ன, ஆண்கள் தெரிந்தே செய்கிற அந்தத் தவறை, கல்யாணத்தை, நானும் செய்து விட்டேன்.

செய்த பிறகுதான் அது தவறல்ல, மாபெரும் தவறு என்பது புரிந்தது எனக்கு.

நடந்தது இதுதான்.

கல்யாணம் முடிந்த கையோடு எங்களைத் தனிக் குடித்தனம் வைத்து விட்டார்கள். நண்பர்கள் வாராந்திர 'செஷன்', பார்ட்டி, ஜஸ்ட் கம்பெனி என்று விதவிதமாகக் கேட்கும்போதெல்லாம் மாதங்கிக்குப் பிடிக்காதென்று நான் மறுத்து விடுவேன். மாதங்கியே எனக்குத் தெளியாத போதையாக இருந்தாள்.

"அப்ப... நீயும் தாஸனாயிட்டே" என்று வாசு ஒருமுறை சொன்னது எனக்குக் குத்தியது. அப்படியல்ல என்று காட்ட அவனுடன் அன்று கம்பெனி சேர்ந்தேன்.

வீட்டுக்குப் போனபோது மாதங்கி, 'விட்டுர்றேன்னீங்க? மறுபடியும் ஆரம்பிச்சுட்டீங்களா?" எனச் சிணுங்கினாள்.

"ரொம்ப நாளாச்சில்ல! ஃப்ரெண்ட்ஸ்களோட சேர்ந்து ஒரு நாளாவது ஜாலியா இருக்கலாம்னுதான்..." என்றேன்.

படுக்கை அன்று தனியானது.

பிறகு பார்ட்டி, செஷன் என அடிக்கடி கலந்து கொண்ட போதும் அப்படியே. எனினும் அவள் அதைப் பற்றி எதுவும் கேட்கவோ சொல்லவோ இல்லை. ஆனால், முகம் வாடினாள். ரகசியமாய் அழுதிருப்பாள் போலவும் கண்கள் சிவந்து, இமைகள் ஈரத்தில் ஒட்டியிருந்தன. விசாரித்தேன்.

"நீங்க ஜாலியா இருங்க. எனக்கு அது போதும்" என்றாள்.

முனீஸிற்குக் குழந்தை பிறந்தது. அன்புச் செல்வனின் பிறந்த நாள் மற்றும் இன்ன பிற பார்ட்டிகளுக்கு அவர்கள் அழைக்கவும் வற்புறுத்தவும் செய்தனர். நான் தீர்க்கமாக மறுத்து விட்டேன்.

"இதான்டா குடி குடியைக் கெடுக்கும்ங்கறது" எனச் சொல்கிறான் வாசு.

அவனுக்கு இன்னும் கல்யாணமாகவில்லை. ○



"நாங்கள் ஆட்சிக்கு வந்தால் சுத்தமான குடிநீர் கிடைக்கச் செய்வோம்னு தலைவர் பேசறாரே, என்ன திட்டம்?"

"சொந்தமா மினரல் வாட்டர் தயாரிக்கற கம்பெனி வச்சிருக்காரே, அதை விற்பனை செய்யப் போறாராம்!"

— மேல்மங்கலம் பத்ரா





• கோபுலு











• ஜெயராஜ்







• மனோகர்



• ராமு

# காதல் காதல்தான்!

தூரிகைகளைக் காதலிக்கும் ஓவியர்களிடம் காதல் காட்சிகளை வரையச் சொன்னோம்.



• பத்மவாசன்

"முருகன்" என்னும் வாழ்த்தொலி எங்கும் முழங்கட்டும்!

# ஆறுபடைவீடுகளில் முதன்மை பெற்றுத் திகழும் பழனியில் பங்குனி உத்திரத்தன்று (18.3.2003)

## முருகனடியார்களுக்கு அன்னதானத் தொண்டில் ஈடுபட வாய்ப்பு!

பேரன்புடையீர் வணக்கம். ஸ்ரீ ஞானதண்டாயுதபாணிப் பெருமான் தங்களுக்கு அனைத்து நலன்களையும் தந்தருளப் பிரார்த்திக்கிறோம்.

கலியுக வரதனும், கண்கண்ட தெய்வமுமான முருகப்பெருமான் குடிகொண்டுள்ள ஆறுபடை வீடுகளில் முதன்மை பெற்றுத் திகழ்வது பழனி ஆகும். இப்பழனி 'திருவாவினன்குடி' என நக்கீரரால் அழைக்கப்பட்ட திருத்தலம். அடிவாரத்தில் குழந்தை வேலாயுதசுவாமியாகவும், மலைமேல் தண்டபாணித் தெய்வமாகவும் திகழ்ந்து, தனக்கென்றும் வேண்டா ஆண்டிக்கோலத்தில் தன்னை நாடி வருவோர்க்கெல்லாம் முருகப்பெருமான் நல்லருள் புரிந்து வருகின்றான். இத்திருத்தலத்தில் நவபாஷாணத்தில் போகர் முனிவரால் உருவாக்கப்பட்ட திருமுருகனுக்கு சகல வியாதிகளையும் போக்கும் பேராற்றல் இருப்பது உலகோர் உணர்ந்த உண்மை.

தெய்வப்பழனியில் முருகப்பெருமான் பக்தர்களுக்கு "ஸ்ரீ அன்னபூரணி அன்னதான சேவா டிரஸ்ட்" என்ற தனி அமைப்பின் மூலம் கிரிவலப்பாதையில் அமைந்துள்ள ஸ்ரீ வனதுர்க்கை அம்மன் திருக்கோயில் எதிரில் பங்குனி உத்திரத்தன்று அன்னதானத் திருப்பணி நடக்கவிருக்கிறது. அரிய இத்திருப்பணியில் முருகபக்தர்கள் பங்கேற்று தாங்கள் எதை நினைத்து அன்னதானம் செய்ய விரும்புகிறீர்கள் என்பதை தெரிவித்தால் அதன்படி பழனியில் உங்களுக்காக பங்குனி உத்திரத்தன்று அன்னதானம் செய்கிறோம். அன்னதானத்திற்கு தங்களால் இயன்ற நன்கொடையை அனுப்பி அருள்சுரக்கும் அன்பு தெய்வம் ஸ்ரீ ஞானதண்டாயுதபாணியின் திருவருள் பெற்று பெருவாழ்வு வாழவேண்டி அன்போடு அழைக்கிறோம்!

★ தாங்கள் அளிக்கும் நன்கொடை எவ்வளவு சிறியதாக இருந்தாலும் அன்புடன் ஏற்றுக்கொள்ளப்படும்.

★ ரூ.500/- அனுப்பும் ஆன்மிக அன்பர்களுக்கு, 'ஆன்மீகம்' மாத இதழ் ஒரு ஆண்டிற்கு அனுப்பி வைக்கப்படும்.

★ ரூ.1000/- அனுப்பும் ஆன்மிக அன்பர்களுக்கு, 'ஆன்மீகம்' மாத இதழ் இரண்டு ஆண்டுகளுக்கு அனுப்பி வைக்கப்படும்.

★ ரூ.5000/- அனுப்பும் ஆன்மிக அன்பர்களுக்கு, 'ஆன்மீகம்' மாத இதழ் பத்து ஆண்டுகளுக்கு அனுப்பி வைக்கப்படும்.

ரூ.500, ரூ.1000, ரூ.5000 அனுப்பும் முருகபக்தர்களுக்கு பழனியில் பூஜிக்கப்பட்ட ஸ்ரீ ஞானதண்டாயுதபாணி வெள்ளி டாலரும், பிரசாதமும், வண்ணப்படமும், சிறிய அளவில் கந்தர் சஷ்டி கவசம் புத்தகமும் அனுப்பி வைக்கப்படும்.

ரூ.5000/- அனுப்பும் ஆன்மீக அன்பர்களுக்கு ஒவ்வொரு வருடமும் பழனியில் பங்குனி உத்திரத்தன்று அன்னதானம் செய்து தொடர்ந்து பத்து ஆண்டுகளுக்கு 'ஆன்மீகம்' மாத இதழ் தங்களுக்கு அனுப்பி வைக்கப்படும். மேலும் தாங்கள் விரும்பும்போது சந்ததியினரின் முகவரிக்கும் மாற்றம் செய்து தருகிறோம். ஆன்மீக அன்பர்கள் ஒவ்வொருரின் பூஜை அறையும் புனிதம் பெறவேண்டும் என்ற இறைசிந்தனையோடு ரூ.5000 செலுத்துபவர்களுக்கு 1024 பக்கங்களுடன் கூடிய பெரிய அளவில் உள்ள அருணகிரிநாதர் அருளிச்செய்த "திருப்புகழ்" நூலை அனுப்பி வைக்கிறோம்.

நன்கொடை அனுப்பும் முருகபக்தர்கள் (Sri Annapoorani Annadhana Seva Trust, Chennai - 4) என்ற பெயரில் Cheque/D.D/M.O மூலம் கீழ்க்கண்ட முகவரிக்கு அனுப்பி ஸ்ரீ ஞானதண்டாயுதபாணியின் பேரருளைப் பெற அன்புடன் வேண்டுகிறோம்.


பழனி ஆண்டவன் - உற்சவர்

நன்கொடைகளுக்கு 80 G பிரிவின்படி வரிவிலக்கு உண்டு.

*Cheque / D.D / M.O* அனுப்ப வேண்டிய முகவரி :


## ஸ்ரீ அன்னபூரணி அன்னதான சேவா டிரஸ்ட்

**SRI ANNAPOORANI ANNADHANA SEVA TRUST (Regd.)**

68, Nadu Street, Mylapore, Chennai - 600 004.

Tel : 24959302 Fax : (044) 7102308 E-mail: siva siva@vsnl.net


பழனி ஆண்டவன் நல்லருள் பெற்று உய்வோமாக!

# சிவகாமியின் சபதம்

நாற்பத்து இரண்டாம் அத்தியாயம்

## பிக்ஷுவின் காதல்

புலிகேசியின் உள்ளத்தில் அசூயையென்னும் பாம்பு படமெடுத்து ஆடுவதை அறியாதவராய் நாகநந்தி பிக்ஷு தமது இருதயத்தைத் திறந்து சொல்லத் தொடங்கினார்:

''தம்பி! குழந்தைப் பிராயம் முதற்கொண்டு, - எனக்கு அறிவு தெளிந்த நாளிலிருந்து, - நான் அஜந்தா மலைக் குகைகளில் வளர்ந்து வந்தேன். அஜந்தா சங்கிராமத்தில் பிக்ஷுக்களும் அவர்களுடைய சிஷ்யர்களும் இருந்தார்கள். என் இருபதாவது பிராயம் வரையில் உயிருள்ள பெண்ணை நான் பார்த்ததில்லை. அதாவது, சதை, இரத்தம், எலும்பு, நகம் ஆகியவற்றால் ஆன மானிடப் பெண்ணைப் பார்த்ததில்லை. ஆனால் ஜீவனுள்ள பெண்களைப் பார்த்திருக்கிறேன். ஒருவனுடைய இருதய அந்தரங்கம் வரைக்கும் சென்று ஊடுருவிப் பார்க்கும் சக்தி வாய்ந்த விசால நய எங்களுடைய பெண்களைப் பார்த்திருக்கிறேன். மானிடக் குலத்துக்கு எட்டாத தெய்வீக சௌந்தரியம் வாய்ந்த மடமங்கையர்களைப் பார்த்திருக்கிறேன். அழகுக்கு அழகு செய்யும் திவ்விய ஆபரணங்களை அணிந்த அணங்குகளைப் பார்த்திருக்கிறேன். தங்கள் கூந்தலில் மலர் அணிந்ததனால் அம் மலருக்கு அழகைத் தந்த பெண்களைப் பார்த்திருக்கிறேன். சாந்தம் குடி கொண்ட பெண்களையும், கருணை வடிவான பெண்களையும், மினுக்கி மயக்கும் மோகினி ரூபங் கொண்ட மாயப் பெண்களையும் பார்த்திருக்கிறேன். இவர்களையெல்லாம் அஜந்தா விஹாரங்களில் உள்ள சுவர்களிலே பார்த்தேன். மகா சைத்திரிகர்களான பிக்ஷுக்கள் தீட்டிய அற்புத சித்திர வடிவங்களிலே பார்த்தேன். அந்த சித்திர வடிவங்கள் எல்லாம் என்னைப்

அமரர் கல்கி

பொறுத்தவரையில் உயிர் உள்ள ஸ்திரீ புருஷர்கள்தான். நான் அவர்கள் அருகில் சென்றதும் என்னை அவர்கள் வரவேற்பார்கள்; முகமன் கூறுவார்கள்; க்ஷேமம் விசாரிப்பார்கள். அவர்களுடன் நானும் மனம் விட்டுப் பேசுவேன்; அவர்களுடைய க்ஷேம லாபங்களை விசாரிப்பேன்; வெளி உலகத்து விஷயங்களைப் பற்றியெல்லாம் அவர்களிடம் கேட்பேன். மௌன பாஷையில் அவர்கள் மறுமொழி சொல்வார்கள்.

"இப்படி நான் தினந்தோறும் பார்த்துப் பேசிப் பழகிய சித்திர வடிவங்களுக்குள்ளே முக்கியமாக ஒரு பெண்ணின் வடிவம் என் சிந்தையைக் கவர்ந்திருந்தது. அவளுடைய பொன்னிற மேனியின் சோபையை அவள் இடையில் உடுத்தியிருந்த நீல நிறப் பட்டாடையும், மாந்தளிர் நிறத்து உத்தரீயமும் அதிகமாக்கிக் காட்டின. புன்னகை பூத்த அவளுடைய இதழ்களின் செந்நிறமும், அவளுடைய கருங்கூந்தலில் குடியிருந்த செவ்வாம்பல் மலரின் சிவப்பு நிறமும் ஒன்றையொன்று தூக்கியடித்தன. தாமரை இதழ் போல வடிவம் அமைந்த அவளுடைய கண்களின் கருவிழிகள் என் இருதயத்தை ஊடுருவி நோக்கியபோது என் இருதயத்தில் நான் அதுகாறும் அறிந்திராத வேதனையும் இன்பமும் உண்டாயின. அந்தச் சித்திர உருவம் தீட்டப்பட்டிருந்த விஹாரத்தில் எந்தப் பக்கத்தில், எந்த மூலையில் நின்று பார்த்தாலும், அந்தப் பத்மலோசனியின் கண்கள் என்னையே நோக்குவது போல் இருந்தன. அவ்வளவு அற்புத வேலைத் திறமையுடன் யாரோ ஒரு சைத்திரிகப் பிரம்மா அவ்வுருவத்தைத் தீட்டியிருந்தார். அந்தச் சித்திரத்தை வரைந்து முந்நூறு வருஷங்களுக்கு மேல் ஆகியிருந்த போதிலும் வர்ணங்கள் சிறிதும் மங்காமல் நேற்று எழுதியவை போல் விளங்கின.

"அந்தச் சித்திரப் பெண்ணின் உருவத்தில் இன்னொரு விசேஷம் இருந்தது; அவள் இடை வளைந்து நின்ற நிலையும், அவளுடைய கரங்களும் கழுத்தும் அமைந்திருந்த தோற்றத்தில் காணப்பட்ட நெளிவும், அவள் ஏதோ ஒரு விசித்திரமான காரியத்தில் ஈடுபட்டிருக்கிறாள் என்பதைப் புலப்படுத்தின. ஆனால், அவள் என்ன செய்து கொண்டிருக்கிறாள் என்பது எனக்குப் புலப்படவில்லை. என் மனத்திற்குள் எவ்வளவோ யோசனை செய்தும் அதை என்னால் அறிய முடியவில்லை. கடைசியில் சைத்திரிக பிக்ஷு ஒருவரைக் கேட்டேன். அவர் 'அந்தப் பெண் பரதநாட்டியம் ஆடுகிறாள்' என்று சொன்னார். பிறகு பரதநாட்டியம் என்றால் என்னவென்று தெரிந்து கொள்ள விரும்பினேன். பரத சாஸ்திரம் என்னும் ஒரு நூல் இருப்பதாகத் தெரிந்து கொண்டு அந்த நூலைச் சம்பாதித்துப் படித்தேன். பரதநாட்டியக் கலையின் பல அம்சங்களையும் நன்கு தெரிந்து கொண்டேன்.

"இதற்குப் பிறகு, அந்த ஓவியக் கன்னி என் உள்ளக் காட்சியில் பரத நாட்டியம் ஆடத் தொடங்கினாள். பரதநாட்டியக் கலைக்குரிய பலவிதத் தோற்றங்களிலும் அவள் காட்சியளித்தாள். பற்பல முத்திரைகள், ஹஸ்தங்கள், பலவித அபிநயத் தோற்றங்கள் - என் அகக் கற்பனையில் தோன்றிக் கொண்டேயிருந்தன. பகலிலும் இரவிலும் சதா சர்வகாலமும் அந்தக் கற்பனைப் பெண் என் உள்ளத்தைக் கொள்ளை கொண்டிருந்தாள். அப்போதுதான் எனக்கு முதன் முதலில் வெளி உலகத்துக்குப் போக வேண்டும், நாடு நகரங்களில் வாழும் ஸ்திரீ புருஷர்களைப் பார்க்க வேண்டும் என்ற ஆசை உண்டாயிற்று. ஒருவேளை அந்த மாதிரி உண்மையாகவே ஒரு பெண் எங்கேனும் இருக்கலாமல்லவா என்ற சபலம் ஏற்பட்டது. இந்த ஆசை காரணமாகவே அஜந்தா நதி வழியைப் பிடித்துக் கொண்டு வெளியே வந்து மலையடிவாரத்துக் கானகங்களிலே நான் சுற்ற ஆரம்பித்தேன். அப்போதுதான் தம்பி, ஒருநாள் உன்னைப் பார்த்தேன். பேச்சு மூச்சற்றுக் கிடந்த உன் உடம்பில் பிராணனை ஊட்டினேன். அதுமுதல் என் மனப்போக்கில் ஒரு மாறுதல் உண்டாயிற்று. சித்திரத்தில் பார்த்துக் கற்பனையில் நான் வளர்த்து வந்த பெண் சிறிது சிறிதாக என் உள்ளத்திலிருந்து மறையலானாள். அவள் இருந்த இடத்தில் நீ வந்து சேர்ந்தாய். நீ என் சொந்த உடன்பிறந்த சகோதரன், என்னுடன் இரத்தத் தொடர்

புடையவன்; என்பதை அறிந்த பிறகு என் இருதயத்தில் அந்தச் சித்திர நாட்டியக் காரிக்குச் சிறிதும் இடமில்லாமற் போய் விட்டது.

"தம்பி! சிறிது காலத்துக்கெல்லாம் நீயும் நானும் அஜந்தா மலைக் குகையை விட்டு வெளியேறி னோம். நீ வாதாபிச் சிம்மாசனம் ஏறி னாய். நீயும் நானுமாக எத்தனையோ யுத் தங்கள் நடத்தி ஜயித்தோம். எத்தனையோ இராஜ தந்திரங்களையும் இராணுவ தந் திரங்களையும் கையாண்டு வெற்றி பெற் றோம். துங்கபத்திரையிலிருந்து நர்மதை நதி வரையில் சளுக்க சாம்ராஜ்யம் படர்ந்து தழைத்தது. உத்தராபத ஹர்ஷ வர்த்தன சக்கரவர்த்தியும் வராகக் கொடியைக் கண்டு அஞ்சலானார்.

"இந்த நாட்களில் நான் ஏற்றுக் கொண் டிருந்த பிக்ஷு விரதத்தை நிறைவேற்றுவது எனக்குக் கொஞ்சமும் கஷ்டமாயில்லை. வாதாபி நகரத்திலும் மற்றும் நான் யாத் திரை செய்த பட்டணங்களிலும் கிராமங் களிலும் எத்தனையோ ஸ்திரீகளை நான் பார்த்தேன். அஜந்தா குகைச் சுவர்களில் நான் பார்த்த சித்திரப் பெண் வடிவங்க ளோடு ஒப்பிடும் போது, இந்த மானிடப் பெண்கள் அழகற்ற அவலட்சண வடிவங் களாகத் தோன்றினார்கள். அந்தச் சித் திரப் பெண்களைப் பார்த்து அவர்களு டைய அழகை வியந்த கண்களினால் இந் தச் சாதாரண மானிட ஸ்திரீகளைப் பார்க்கவே முடியவில்லை.

"உலகத்திலே மனிதர்கள் என்னத்திற் காக ஸ்திரீகள் மீது மோகங் கொண்டு பைத்தியம் பிடித்து அலைகிறார்கள் என்று வியந்தேன். தம்பி! ஒருவர் பின் ஒருவராக நீ ஆறு பெண்களை மணந்த போது உன்னுடைய பரிதாப நிலையைக் குறித்து இரங்கினேன்!"

இத்தனை நேரம் மௌனமாயிருந்து கேட்டுக் கொண்டிருந்த புலிகேசி இப்போது குறுக்கிட்டுக் கூறினார்:

"ஆம், அண்ணா! அதையெல்லாம் நினைத்தால் ஏன் அந்தப் பைத்தியக்காரத் தனங்களில் இறங்கினோம் என்று எனக் கும் ஆச்சரியமாய்த்தான் இருக்கிறது. என்ன செய்யலாம்? எங்களுக்கெல்லாம் அநுபவித்த பிறகுதான் புத்தி வருகிறது. நீயோ பெண் மோகம் என்பது எவ்வளவு அசட்டுத்தனம் என்பதை முன்னதாகவே கண்டு கொண்டு விட்டாய்!"

புலிகேசி சக்கரவர்த்தி இவ்விதம் கூறிய போது அவருடைய தொனியில் சிறிது பரி காசம் கலந்திருப்பதாகத் தோன்றியது; ஆனால், அறிவுக் கூர்மை மிகப் படைத்த பிக்ஷுவுக்கு அச்சமயம் அது தெரிய வில்லை. அவர் மேலும் கூறினார்:

"இல்லை, தம்பி, இல்லை! உன்னுடைய புகழ்ச்சிக்கு நான் அருகனல்ல. நீங்கள் எல் லாரும் பட்டு அநுபவித்த பிறகு, உண்மை யைக் கண்டு கொண்டீர்கள். ஆனால், நானோ எத்தனையோ காலம் துறவறத்தை அநுஷ்டித்த பிறகு, யௌவனப் பிராயத் தையெல்லாம் இழந்து விட்ட பிறகு, ஒரு பெண்ணின் காதலுக்கு வயமானேன். ஆனால், என்னுடைய காதல் மற்ற உலக மாந்தரின் காதலை ஒத்ததன்று. அதைப் பற்றிச் சொல்வதற்கு முன்னால் நான் காதல் வயப்பட்ட வரலாற்றைச் சொல்லி விட வேண்டும்.

"வடக்கே ஹர்ஷ மகா சக்கரவர்த்தி யுடன் நாம் ஓர் உடன்படிக்கைக்கு வந்து நர்மதைக்கு தெற்கே அவருடைய சைனி யங்கள் வருவதில்லையென்று வாக்குறுதி பெற்ற பிறகு, தென்னாட்டுப் படையெடுப் புக்கு முன் ஆயத்தம் செய்வதற்காகச் சென்றேன். தென்னாடெங்கும் பௌத்த மடங்களும் ஜைன மடங்களும் ஏராள மாக இருந்தபடியால் என்னுடைய வேலை மிகவும் சுலபமாயிருந்தது. காஞ்சி இராஜ விஹாரத்திலே கூட நமக்காக வேலை செய்யும் பிக்ஷுக்கள் கிடைத்தார் கள். பிறகுதான், உனக்குச் சைனியத்துடன் கிளம்பும்படி ஓலை அனுப்பினேன். அனுப்பி விட்டு நான் மதுரைக்குப் பிரயா ணப்படுவதற்கு முன்னால் என் வாழ்க் கையிலேயே முக்கியமான சம்பவம் நிகழ்ந்துவிட்டது.

"தம்பி! சளுக்க சாம்ராஜ்யத்தின் விஸ் தரிப்புக்கான வேலைகளில் நான் பூரண மாய் ஈடுபட்டிருந்த போதிலும், இடை யிடையே சிற்ப சித்திரக் கலைகளில் என் மனம் செல்லாமல் தடுக்க முடியவில்லை. காஞ்சியில் சில அற்புதமான சிற்பங் களைப் பார்த்தேன்; மாமல்லபுரம் என்று புதிதாகப் பெயர் பெற்ற துறைமுகத்துக்

கருகில் சில அதிசயமான சிற்ப வேலைகள் நடைபெறுவதாகக் கேள்விப்பட்டேன். மதுரைக்குப் போகுமுன் அவற்றைப் பார்க்க வேண்டும் என்று சென்றேன். மாமல்லபுரத்துச் சிற்பங்கள் உண்மையில் அதிசயமாகவே இருந்தன. அந்த வேலைகளை நடத்தி வைக்கும் பெரிய சிற்பி ஒருவர் அரண்யத்தின் நடுவில் வீடு கட்டிக் கொண்டு வசிப்பதாகக் கேள்விப்பட்டேன். அவரைப் பார்க்க வேண்டுமென்று விரும்பி அவருடைய சிற்ப வீட்டைத் தேடிக் கொண்டு போனேன்.

"அந்த மகா சிற்பியின் வீட்டில் பல அற்புதங்களைக் கண்டேன். முக்கியமாக, ஆயனர் அப்போது செய்வதில் ஈடுபட்டிருந்த நடனச் சிலைகள் என் மனத்தைப் பெரிதும் கவர்ந்தன. அஜந்தாவின் புத்த விஹாரத்தின் சுவரில் நான் பார்த்த நடனப் பெண்ணின் உருவத்தை அவை எனக்கு நினைவூட்டின. அந்த நடனச் சிலைகளைப் பார்த்து வியந்து கொண்டிருந்தபோது ஒரு மகா அற்புதம் நிகழ்ந்தது. வீட்டின் பின் கட்டிலிருந்து ஒரு பெண் உருவம் நாங்கள் இருந்த சிற்ப மண்டபத்துக்கு வந்தது. ஊனும் உடலும் உயிரும் உள்ள உருவந்தான். ஆனால், அஜந்தா சுவரில் நான் பார்த்த சித்திரத்துக்கும் இந்த உருவத்துக்கும் அணுவளவும் வேற்றுமை இல்லை. அதே பூரண சந்திரனையொத்த முகம்; பொன்னிற மேனி; அதே வர்ணமுள்ள உடைகள்; நெஞ்சை ஊடுருவிப் பார்க்கும் நீண்ட நயனங்கள்; கூந்தலை எடுத்துக் கட்டியிருந்த விதமும் அப்படியே. சற்று நேரம் நான் காண்பது உண்மையான தோற்றமா அல்லது சித்தப் பிரமையா என்று பிரமித்திருந்தேன். அந்த உருவம் அதன் செவ்விதழ்களைச் சிறிது விரித்து, 'அப்பா! இந்தச் சுவாமிகள் யார்?' என்று கேட்ட பிறகுதான், இதெல்லாம் உண்மை என்று உணர்ந்தேன். ஆயனச் சிற்பி என்னைப் பார்த்து, 'இவள் என்னுடைய மகள் சிவகாமி; இவளுடைய நடனத் தோற்றங்களைத்தான் நான் சிலை வடிவங்களாக அமைக்கிறேன்' என்றார். சற்று நேரத்துக்கெல்லாம் சிவகாமி நடனம் ஆடினாள்.

"தம்பி! அந்த நேரம் முதல் இந்த உலகமே எனக்குப் புதிய உலகமாக மாறி விட்டது. இவ்வுலகில் யுத்தத்தையும் இராஜ தந்திரத்தையும், இராஜ்ய பாரத்தையும் விட முக்கியமான காரியங்களும் இருக்கின்றன என்பதை உணர்ந்தேன். அஜந்தா அடிவாரத்தில் உன்னைச் சந்திப்பதற்கு முன்னால் சிலகாலம் அங்கே நான் கண்ட நடனச் சித்திரம் எப்படி என் உள்ளத்தைக் கவர்ந்ததோ, அல்லும் பகலும் அதே நினைவாக இருக்கச் செய்ததோ, அதே மாதிரி இப்போது சிவகாமியின் உருவம் என் உள்ளத்தைக் கவர்ந்தது. உள்ளத்தை மட்டுமா? ஊனையும் உயிரையும் உயிரின் ஒவ்வோர் அணுவையும் கவர்ந்து விட்டது.

"ஆம், தம்பி! சிவகாமியிடம் நான் காதல் கொண்டேன்; பிரேமை கொண்டேன்; மோகம் கொண்டேன். இன்னும் உலகத்துப் பாஷைகளில் என்னென்ன வார்த்தைகள் அன்பையும், ஆசையையும் குறிப்பதற்கு இருக்கின்றனவோ அவ்வளவு வார்த்தைகளையும் குறிப்பிட்ட போதிலும் காணாது என்று சொல்லக்கூடிய வண்ணம் அவள் மீது பிரியங்கொண்டேன். காதல், பிரேமை, மோகம் என்னும் வார்த்தைகளை இந்த உலகம் தோன்றிய நாள் முதல், கோடானு கோடி மக்கள் எத்தனையோ கோடி தடவை உபயோகித்திருக்கிறார்கள். ஆனால், அந்த வார்த்தைகளின் மூலம் நான் குறிப்பிடும் உணர்ச்சியை அவர்கள் அறிந்திருக்க மாட்டார்கள். என்னுடைய காதலில் தேக தத்துவம் என்பது சிறிதும் கிடையாது.

"சிவகாமியின் உருவத்தைக் கண்டு நான் மோகித்து விடவில்லை. அவளுடைய உருவத்தைக் காட்டிலும் அழகிய சித்திர சிற்ப வடிவங்களை நான் கண்டிருக்கிறேன்.

"சிவகாமியின் பசும்பொன் மேனி நிறத்துக்காக அவள் மீது நான் காதல் கொள்ளவில்லை. அந்த மேனி நிறத்தைக் காட்டிலும் பிரகாசமான பொன்னிறத்தை இதோ இந்தச் சந்திரனிடம் காணலாம்.

"சிவகாமியின் கண்ணழகைக் கண்டு நான் மயங்கிவிடவில்லை. அவள் வளர்த்த ரதி என்னும் மான் குட்டியின் மருண்ட கண்கள் சிவகாமியின் கண்களைக் காட்டிலும் அழகானவை.

"சிவகாமியின் உடம்பின் மென்மைக்காக அவள் மீது நான் ஆசை கொள்ள



வில்லை. அவளுடைய உடம்பைக் காட்டிலும் அதிக மென்மை பொருந்திய எத்தனையோ புஷ்பங்கள் உலகில் இருக்கின் றன.

"ஆம், தம்பி, சிவகாமியிடம் நான் கொண்டிருக்கும் காதலில்

# அருள்வாக்கு!

தர்மம் என்றால் என்ன?

மனிதராகப் பிறந்த எல்லாருக்கும் பசி, தாகம் இருக்கிறது. அவர்கள் வசிக்க ஓரிடம் வேண்டியிருக்கிறது. குளிர், வெய்யிலிலிருந்து காப்பாற்றிக் கொள்ளவும், மானத்தை ரட்சித்துக் கொள்ளவும் ஆடை அணிய வேண்டியிருக்கிறது. இதற்கெல்லாம் மனிதன் வசதி செய்து கொள்ள வேண்டும். ஏதோ ஒரு தொழிலைச் செய்தே இதற்கு வசதி செய்து கொள்கிறான். அத்தியாவசியமான சுய தேவையைப் பூர்த்தி செய்து கொள்வதோடு ஒவ்வொரு மனிதனும் பிறர் விஷயமாகச் சில கடமைகளை நிறைவேற்றவும் வேண்டியிருக்கிறது. ஒவ்வொருவனும் ஏதோ ஒரு குடும்பத்தில் பிறப்பதால் அந்தக் குடும்பத்தில் இருப்பவர்களுக்கும், பிற்பாடு கல்யாணமானதும் மனைவி மக்களுக்கும் பொறுப்பெடுத்துக் கொள்ள வேண்டி யிருக்கிறது. தன்னுடைய சமுதாயம், தேசம் இவற்றுக்கெல்லாம் மனிதன் கடமை ஆற்ற வேண்டியிருக்கிறது. பலவிதத்தில் சுய தேவைகளைப் பூர்த்தி செய்து கொள்ளலாம். பலவிதத்தில் வீடு, நாடு, இவற்றுக்கான கடமைகளைச் செய்யலாம். ஆனால் மனத்துக்குத் தோன்றியபடியெல்லாம் இவற்றைச் செய்யாமல் எவருக்கும் தீங்கு விளைவிக்காத விதத்தில் அதீதமான காமமும் குரோதமும் கலக்காமல் செய்ய வேண்டும். தன்னையும் மேம்படுத்திக் கொண்டு, அனைவரையும் உயர்த்துகிற விதத்தில் தொழிலையும், கடமையையும் செய்ய முடியும். இவ்வாறு இக உலகக் காரியங்கள், சம்பந்தப்பட்ட அனைவரது ஆத்ம அபிவிருத்திக்கும் அநுசரணையாகச் செய்வதற்குத்தான் 'தர்மம்' என்று பெயர்.

**- ஜகத்குரு காஞ்சி காமகோடி**
**ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி**
**சங்கராச்சார்ய சுவாமிகள்**

தேசு தத்துவம் என்பதே கிடையாது."

"ஆகையால் இருபத்தைந்து ஆண்டுகளுக்கு முன்னால் உனக்காக நான் ஏற்றுக் கொண்ட பிக்ஷு விரதத்துக்குச் சிவகாமியினால் யாதொரு பங்கமும் நேரவில்லை..."

இவ்விதம் நாகநந்தி சொல்லி வந்த போது அவருடைய முகத்தில் அசாதாரணமான ஒரு கிளர்ச்சி காணப்பட்டது. புலிகேசி தம் மனத்தில், 'இதென்ன' ஒரு வகை விசித்திரமான பைத்தியம் போல இருக்கிறதே? மகேந்திரனுடைய சிறையில் வெகு காலம் கிடந்ததனால் புத்தி மாறாட்டமாகிவிட்டதா?' என்று எண்ணமிட்டார்.

புலிகேசியின் முகபாவத்தைக் கொண்டு இதை ஊகித்து உணர்ந்த நாகநந்தி கூறினார்: "இல்லை தம்பி, இல்லை! எனக்குப் பைத்தியம் பிடித்து விடவில்லை. இவ்வளவு தெளிவாக என்னுடைய அறிவு இதற்கு முன் எப்போதும் இருந்ததில்லை. எனக்கு உண்மையில் சிவகாமியின் மீது ஆசையே கிடையாது; அவளை ஆட்கொண்டிருக்கும் கலைத் தெய்வத்தினிடந்தான் மோகம். சிவகாமி சுயப்பிரக்ஞையை இழந்து தன்னை மறந்து ஆனந்த வெளியில் மிதந்து நடனமாடும்போது, நானும் தன் வசமிழந்து விடுகிறேன். அப்போது எனக்கு உண்டாகும் ஆனந்தம், இந்த உலகில் வேறெந்தக் காரியத்திலும் ஏற்பட்டதில்லை. தம்பி! மகேந்திர பல்லவனை நான் எவ்வளவோ பகைக்கிறேன்; துவேஷிக்கிறேன்; ஆனால், ஒரே ஒரு விஷயத்தில் மகேந்திரனும் நானும் ஒரே அபிப்பிராயம் கொண்டவர்கள். சிவகாமி கேவலம் மனிதர்களுக்கு மனைவியாகப் பிறந்தவள் அல்லவென்றும் அவளுடைய அற்புதக் கலை தெய்வத்துக்கே அர்ப்பணமாக வேண்டிய கலையென்றும் ஒருநாள் ஆயனரிடம் மகேந்திர பல்லவன் சொன்னான். புத்தர் சிலையின் பின்னாலிருந்து அதை நான் கேட்டேன்; அவனுடைய கூற்றை மனத்திற்குள் பூரணமாக ஆமோதித்தேன். தம்பி! நீ நிச்சயமாக நம்பலாம். சிவகாமியிடம் நான் கொண்ட காதலினால் என்னுடைய பிக்ஷு விரதத்துக்கு யாதொரு பங்கமும் நேராது" என்று முடித்தார் நாகநந்தியடிகள்.

(தொடரும்)

# கமல் பேட்டி தொடர்ச்சி...

**உங்கள் 'மையம்' பத்திரிகை என்னவாயிற்று?**

எனது ரசிகர்களுக்காகத் தொடங்கி நடத்தினேன். நான் என்ன சொன்னாலும் கேட்டுக் கொள்கிற மனப்பாங்குடன் இருந்தார்கள். பிடிக்கிறது, பிடிக்கவில்லை என்றால்கூட 'நீ சொல்லு தலைவா கேட்கிறோம்!'' என்று விசிலடித்து ஏற்றுக் கொள்கிற ஒரு வித அன்பில், வேப்பிலைக் கொழுந்து மாதிரி சாப்பிட்டுக் கொண்டிருந்தார்கள். இது ஒரு விதமான அன்பு கலந்த சூழ்ச்சி என்று உணர்ந்து கொண்டபோது... என்ன செய்யலாம்? என்று யோசித்ததன் விளைவுதான் மையம். அந்தப் பத்திரிகையில் அசோகமித்திரன் எழுதியிருக்கிறார். சுஜாதா எழுதியிருக்கிறார். பாலகுமாரனைப் படக்கதை எழுத வைத்தோம். அதில் வெளியான எனது தலையங்கப் பக்கங்களைப் புரட்டுகிற போது எனக்கே ஆச்சர்யமாக இருக்கிறது. ஏதோ கோபத்தில் அரசியலைத் தாக்கியிருக்கிறேன். நாற்பத்தொன்பதாவது சட்டத்திருத்தம் தொடங்கி வக்ஃபு வாரியம் வரையிலும் பேசியிருக்கிறேன். இவை தேவையில்லாத விஷயம் ஒரு நடிகனுக்கு. நல்ல வேளையாக அதையொரு வெகுஜனப் பத்திரிகையாகக் கொண்டு வரவில்லை.



**'மையம்' மூலமாக உங்கள் ரசிகர்களைத் தயாரிக்க முயற்சித்த நீங்கள், திரைப்படக் கல்வியைப் பள்ளியிலிருந்தே தொடங்க வேண்டும் என்று அரசுக்கு எடுத்துச் சொன்னதாகத் தெரியவில்லையே?**

பலமுறை சொல்லிப் பார்த்துவிட்டோம். ஒவ்வொரு தடவை சொல்லும் போதும், நீ வந்து கற்றுக்கொடு என்கிறார்கள். நான் மாணவன். ஏகலைவனைக் கற்றுக் கொடு என்றால் என்ன செய்வான்? கட்டை விரலைக் கேட்டால்கூட கொடுத்துவிடுவேன். கிளாஸ் எடு என்றால் என்ன செய்ய? குறைந்தபட்சம் சுயநிதிக் கல்லூரிகளிலாவது, சினிமாவின் சில துறைகளையாவது சொல்லித் தாருங்கள் என்று வேண்டுகோள் விடுத்து வருகிறேன். பாரம்பரியமான பூனா இன்ஸ்டியூட்டில் போய்ச் சொன்னேன். திரைக் கதையை எழுதச் சொல்லித் தராமல் எப்படி ஒரு சினிமாப் பள்ளி இயங்க முடியும்? சினிமாவின் ப்ளூ பிரிண்டே அதுதானே என்றேன். அவர்கள் தானாக வரும் என்ற அசிரத்தையோடு இருக்கிறார்கள். இங்கேயும் அதே நிலைதான். ஆனால் அமெரிக்காவில் ஒரே கூரையின் கீழ் சினிமாவின் அத்தனை பிரிவுகளையும் படித்துவிட்டு வரலாம்.

நான் கூட அமெரிக்க எழுத்தாளர் கழகத்தில் உறுப்பினராக இருக்கிறேன். ரைட்டர்ஸ் ஸ்டுடியோ என்ற அமைப்பு இருக்கிறது. அவர்களோடு அளவளாவிக் கொண்டிருக்கிறேன். ட்ருபி என்ற திரைக்கதை எழுத்தாளரோடு நான் ஒர்க்ஷாப் பண்ணியிருக்கிறேன்.

'பீட்டர் புருக்ஸ்' மகாபாரதத்தை எழுதினாரே ஷான்ட்லாட் கெரியார், அவரது 'அண்டர்ஸ்டடி' (மாணவன்) என்று நான் தைரியமாகச் சொல்லிக் கொள்ளலாம். அவர் மிகப் பெரிய திரைக்கதை எழுத்தாளர். நமக்கு சத்யஜித்ரே மாதிரி, ஸ்பெயின் நாட்டுக்கு லூயிபுனுவேல் உலகத் தர

சினிமா மேதை. திரைக் கதாசிரியர். அவரோடு இணைந்து 'ஷான்ட்லாட் கெரியார்' பத்தொன்பது படங்களுக்குத் திரைக்கதை எழுதியிருக்கிறார். மருத நாயகம் படத்தின் இணைத் திரைக்கதை எழுத்தாளர். அவரைக் கூப்பிட்டால்கூட தமிழ் மாணவர்களுக்கு வந்து சொல்லித் தருவார். என் அளவுக்கு இந்தியா மீது அவருக்குப் பற்று உண்டு. எங்களுக்கு சினிமாதான் மொழி என்பதால் நாடு, மொழி என்ற வரைகோடு கள் பிரச்னை அல்ல.

**பதினோரு கோடியில் ஹே ராம் எடுக்க முடிந்த கமலால் நாற்பது கோடி திரட்டி மருதநாயகம் எடுக்க முடியாதது ஏன்?**

ஐம்பது கோடியை அள்ளித் தெளித்து தேவ தாஸ் படமெடுத்தார்கள். மருதநாயகத்தின் பட்ஜெட் அப்படிப்பட்டதல்ல. ஒவ்வொரு கோடிக்கும் நான் பதில் சொல்லியாக வேண் டும். ஒவ்வொரு கோடிக்கு மான மதிப்பு, ஸ்கிரீனிலும் தெரிந்தாக வேண்டும். அது தவிர, இது தமிழ்ப்படம் மட்டுமல்ல, ஆங்கில, பிரெஞ்சு படமது. இன்றைய சூழ்நிலையில் நாற்பது கோடியைத் தாண்டிவிடும். ஏனென்றால் வரலாற்றைத் திரும்பிப் பார்க்கும் கதைக்களம்.

இந்தியாவின் முதல் சுதந்திரப் போராட்ட எழுச்சி என்று 1857ஆம் ஆண்டு கலகத்தைக் குறிப்பிடுகிறார்களே, அதற்கு நூறு வருடங்களுக்கு முன்பு, சுதந்திரத்திற்காக மாபெரும் கலகத்தில் ஈடுபட்ட ஒரு தமிழனின் உண்மைக் கதை.

**பக்கத்து வீட்டுக்காரர்களான சீனர்கள், ஹாலிவுட்டில் இயக்குனர்களாகவும் நடிகர்களாகவும் ஜெயித்துக் கொண்டிருக்கிறார்கள். ஆப்பிரிக்க சகோதரர்கள்கூட வெளுத்துக் கட்டுகிறார்கள். கமல் மாதிரியான ஆட்களுக்கு என்ன வந்தது?**

என்னுடைய சோகத்தை மட்டும் நீங்கள் பொதுவில் வைக்க முடியாது. மணிரத்னத்திற்கும் கூட இந்தச் சோகம் இருக்கலாம். காரணம் இருவருமே அங்கே போய் ஜெயிக்கக் கூடியவர்கள்தான். ஆனால் மனோஜ்நைட் ஷியாமளனும், சேகர் கபூரும் இயக்குனராக அங்கே ஜெயித்திருக்கிறார்கள். 'மிஸ்டர் அண்ட் மிஸஸ் ஐயர்' படத்தை இயக்கியிருக்கும் அபர்னா சென் இதைச் சாதித்திருக்கிறார். இந்தியா இப்போதுதான் ஹாலிவுட்டை நோக்கி நகர்ந்து கொண்டிருக் கிறது.

# "கட்டை விரலைக் கேட்டாலும் கொடுப்பேன்!"

**கமலை குறைந்தபட்சம் ஒரு ஹாலிவுட் நடிகராகப் பார்க்க வேண்டும் என்று ரசிகர்கள் ஆசைப்படுகிறார்களே.**

அந்த ஆசை நியாயமானது. நிறை வேறக் கூடியது. மருத நாயகம் மூலம் நிறை வேறி இருக்க வேண்டி யது. இதை விட்டுவிட்டு 'ஆஸ்கர் பரிசு வாங்கக் கடவது'' என்று எனக்கு வாழ்த்துச் சொல்கிறார்கள். அந்த வாழ்த்தை நான் ஏற்றுக் கொள்ளமாட்டேன். காரணம் ஆஸ்கர் பரிசை ஒரு விருந்தாளிக்குத் தருவது போலக் கொடுக்கிறார்கள். அது ஒரு பட்டம் 'ஹரிஜன்' என்பதைப்போல. இது ஒரு போதும் எங்களை முன்னேற்றிவிடாது. கடவுளின் குழந்தை என்று எங்களை ஒத்துக் கொண்டது போதாது. நாங்கள் கடவுளின் குழந்தையாக இருப்பது இருக்கட்டும், உன்னுடைய தம்பி யாக எப்போது ஏற்றுக் கொள்ளப் போகிறாய் என்பதுதான் கேள்வி. அந்தக் கேள்விக்கு அவர்கள் இன்னும் பதில் தருகிற மாதிரி இல்லை. அவர்கள் என்னைத் தம்பியாக ஒப்புக் கொள்ள வேண்டும் என்றால், நான் அமெரிக்கன் ஃபிலிம் பண்ணித்தான் ஆஸ்கர் வாங்க வேண்டும். ஆனால், ஒரு இந்தியனாக இருந்து, தனியாகப் பண்ண வேண்டும். அதற் கான முயற்சிதான் மருதநாயகம்!

**கவிஞர் கமல் எங்கே? ஆளையே காணோம்?**

ஒரு சேரிப்பிள்ளை மாதிரிதான் கவிஞர் கமல்! இன்னும்

சொல்லப்போனால் சீர்திருத்தப் பள்ளியில் படித்துவிட்டுத் திரும்பியவன் போலத்தான். இது மாதிரிப் பிள்ளைகளை நம்பிக்கையான இடத்தில் வேலைக்கு வைக்க மாட்டார்கள். ஆனாலும் ஞானக் கூத்தன், புவியரசு மாதிரியான நண்பர்கள் என்னை வேலைக்குச் சேர்த்துக் கொண்டார்கள். இது போலிப் பணிவெல்லாம் கிடையாது. நான் தமிழைத் திருடிவிட்டேனே தவிர, எனக்குச் சொந்தமில்லை. அதாவது நான் தமிழைப் படிக்கவில்லை என்று சொல்ல வருகிறேன். தமிழை நானே படித்து சம்பாதித்திருந்தேன் என்றால், செலவு முறைகளும் நன்றாக இருந்திருக்கும். கன்னம் வைத்து திருடிக் கொண்டு வந்ததால், அள்ளித் தெளிக்கிற கெட்டப் பழக்கம் என்னிடம் இருக்கிறது.

**பாத்திரத்திற்காக உடல் எடையைக் திடீரெனக் குறைத்துக் கொள்வதும், உயர்த்திக் கொள்வதும் கமலுக்கு ஒரு ஆபத்தான விளையாட்டாகத் தோன்றவில்லையா?**

உயர்த்தியது வேண்டுமானால் தவறாயிருக்கலாம். விளையாட்டு குத்துச் சண்டை வீரர்கள் கடுமையான உடற்பயிற்சி மூலம் உடல் எடை கூட்டுகிறார்கள். அதே வழியைத்தான் நானும் பின்பற்றினேன். இந்த வழியில் கூடும் எடை உயர்வு, கொழுப்பு கிடையாது. அத்தனையும் மசில். ஆளவந்தானுக்காக எடையைக் கூட்டிய போது எனக்குப் பாதிப்பு வரவில்லை. ஏனென்றால் நான் 'ஸ்டீராய்டு' பயன்படுத்தவில்லை. பாடி பில்டிங்கைப் பொருத்தவரை, நோ பெயின், நோ கெயின் என்பதுதான் எங்கள் முதல் விதி.

**தனது படங்களிலெல்லாம் உருகி உருகிப் பாடுகிற கமலுக்கு, ஒரு இசையமைப்பாளராக வேண்டும் என்ற எண்ணம் உண்டா?**

சினிமாவில் பாட்டே இருக்கக் கூடாது என்கிற பேரார்வம்தான் இருக்கிறது. தமிழ் சினிமா கெட்டது போதாதா? நான் வேறு வந்து இன்னும் கெடுக்க வேண்டுமா? அதுவும் இளையராஜா போன்ற ஒரு உன்னதமான கலைஞர், திறமைசாலி இருக்கிற துறையில்...?

**ஒரு நடிகராக இருப்பதில் ஒரு நல்ல தந்தையாக இருக்க முடியவில்லைதானே?**

எனக்கு அந்தப் பிரச்னை வரவேயில்லை. காரணம், ஒரு நேரத்தில் ஒரு படம் தான் பண்ணுகிறேன். இந்த முறையைக் கொண்டு வந்ததே நான்தான். எனது அலுவலகம், வீடு, எல்லாமே இதுதான். எனது குழந்தைகளுக்காக குடும்பத்திற்காக, நண்பர்களுக்காக, வேண்டிய அளவு நேரத்தை எப்போதுமே செலவு செய்து வந்திருக்கிறேன். சமீப காலமாக வெளி நிகழ்ச்சிகளில் அதிகம் கலந்து கொள்கிறேனே தவிர, மிக சந்தோஷமாக மூன்று மாத காலம் கூட வெளியே வராமல் வீட்டிற்குள்ளேயே தங்கியிருக்கிறேன். நண்பர்கள் வந்து வந்து போய்க் கொண்டிருப்பார்கள். உலகமும் தெரியும்.

நேர்காணல் : **ஆர்.சி.ஜெயந்தன்**

படம் : **யோகா**



# பயமுறுத்தும் பவானி!

**கா**விரியில் தண்ணீர் வராமல், தஞ்சை விவசாயிகள் பட்டினிச் சாவுகளைச் சந்தித்துக் கொண்டிருக்க, இப்போது பவானிப் பிரச்னையும் தமிழகத்தைப் பயமுறுத்திக் கொண்டிருக்கிறது.

"நாங்கள் அணையே கட்டவில்லை. தடுப்பணைதான் கட்டுகிறோம். இதனால் எந்தப் பாதிப்பும் வராது" என்று கேரள அரசு சொல்லிக் கொண்டிருக்கிறது.

**கா**விரியின் உப நதிகளில் ஒன்று பவானி. நீலகிரி மாவட்டத்தின் உயரமான சிகரங்களில் உற்பத்தியாகும் பவானி, உடனே தடுக்கப்படுவது மேல்பவானி அணைக்கட்டுப் பகுதியில்தான்! ஆனால் அங்கு பவானி நீர் சேமித்து வைக்கப்படுவ இல்லை. விவசாயத்துக்கும் பயன்படுத்தப்படுவ இல்லை. மாறாக மேல் பவானியில் மின்சாரம் உற்பத்திக்கு மட்டுமே பயன்படுத்தப்படுகிறது. பின்னர் கேரள எல்லைக்குள். சுமார் 42 கி.மீ. பாய்ந்து, மீண்டும் தமிழகத்திற்குள் நீலகிரி மாவட்டம் பில்லூர் அணையில் சேர்கிறது.

அங்கிருந்து வருகையில் கீழ் பவானிசாகர் அணையில் சேமிக்கப்படுகிறது. இடையில் சத்தியமங்கலம் போன்ற பகுதிகளில் தாகம் தணிக்கிறது. கீழ் பவானிசாகர் அணை பெரியார் மாவட்டத்தை வளங்கொழிக்க வைக்கும் நீர் ஆதாரம். கீழ்பவானி அணையிலிருந்து விடுபட்டு வரும் பவானி, மேட்டூரிலிருந்து ஈரோடு நோக்கி வரும் காவிரியை பவானி நகரில் சந்திக்கிறது. இந்த இடத்துக்கு கூடுதுறை என்று பெயர்.

சுமார் 200 கி.மீ. தூரம் மட்டும் ஓடி வரும் பவானி ஆற்றின் வரலாறு இதுதான்.

கேரளப் பகுதியில் இது பாயும் குறுகிய பகுதி அடர்ந்த காடாகும். இதுவரை விவசாயத்துக்கோ, குடிநீருக்கோ கேரளாவில் பயன்படுத்தப்படவில்லை.

இப்போது கேரள அரசு தடுப்பணை கட்டும் இடத்துக்குப் பெயர் முக்காலி. இது அட்டப்பாடி என்ற சிற்றூருக்கு அருகில் இருக்கிறது. இந்த முக்காலியில் தடுப்பணையைக்கட்டி, தண்ணீரைச் சேகரித்து, கால்வாய் மூலம், பாலக்காடு மாவட்டத்தில் உள்ள மன்னார்காடு பகுதிக்கு விவசாயத்துக்குக் கொண்டு செல்வது கேரள அரசின் திட்டம். இப்போது, மத்திய சுற்றுச் சூழல் இலாகா இதற்குத் தடை போட்டிருப்பதால் தடுப்பணைக் கட்டுவதை நிறுத்திய கேரள அரசு, கால்வாய் வெட்டுவதை நிறுத்தவில்லை.

"1973ம் ஆண்டு ஒப்பந்தப்படி பவானி நீரை உபயோகிக்க உரிமை உண்டு" என்கிறது கேரள அரசு. அப்போது கேரளாவில் சிறுவாணி அணையை, கோவை குடிநீருக்காகக் கட்டி, பயன்படுத்திக் கொள்வது குறித்துப் போடப்பட்ட ஒப்பந்தப்படி, பவானி நீரை கேரளா பயன்படுத்திக் கொள்ளுமாம். ஆனால் காவரியில் நீர்வரத்துக்கு முக்கியப் பங்காற்றும் பவானியில் எந்தவிதமான அணையோ, தடுப்பணையோ கட்ட வேண்டுமென்றால், பின்னர் நியமிக்கப்பட்ட காவிரி நதி நீர் ஆணையத்தின் அனுமதி பெற வேண்டும்'' என்பது தமிழகத்தின் நிலை.

ஜெயலலிதா அரசின் விவேகத்துக்கு பெரிய சவாலாக நிற்கிறது பவானி!

\- கௌசி





பிரச்னையில்லாத காதல் உண்டா? ம்ஹூம். ஏதோ ஒரு விதத்துல, மனசை டென்ஷன் ஆக்கி விடுகிற விஷயம் காதல். இம்மாதிரி காதல் டென்ஷன்களுக்கு கன்ஸல்டன்ஸி மாதிரி செயல்படுகிறது எஸ்.எஸ். மியூசிக்கின் 'இதயம் பேசுகிறது' நிகழ்ச்சி.

ஈ மெயில், லெட்டர், டெலிபோன் மூலமா "இதுக்கு என்ன பண்ணலாம்ங்க?" என்று வருகிற கேள்விகளுக்கு காம்பயர்கள் சப்னாவும், நவீனாவும் சொல்ற விளக்கங்களுக்காகவே அந்த நிகழ்ச்சிக்குத் தனி மவுசு!

'வாலன்டைஸ்ன் டே'வுக்காக தங்கள் அனுபவங்களைச் சொன்னார்கள் இருவரும்:

**சப்னா:** முதல் முறையா 'ஹார்ட்ஸ் ஸ்பீக்' நிகழ்ச்சியில் பங்கேற்றபோது எனக்கு இலேசான டென்ஷன். காரணம், நான் மாஸ் கம்யூனிகேஷன் படிச்சேன்னாலும், காதல் சம்பந்தப்பட்ட பிரச்னைகளை அலசி ஆராய்ந்து ஆலோசனை சொல்ல, நம்மால் முடியுமாங்கற சந்தேகம்தான்! இன்னொரு விஷயம், நம் வயதையொத்த இன்னொருவர் பிரச்னைக்கு ஆலோசனை சொன்னா அவங்க சீரியஸாக எடுத்துக் கொள்ளுவாங்களான்னுல்லாம் நினைச்சேன்.

**நவீன்:** ஒரு கோணத்தில் நீ சொல்றது சரிதான். ஆனா நான் இதையே இன்னொரு கோணத்திலிருந்து பார்க்கிறேன்.



# காதல் கன்ஸல்டன்ஸி!

இங்கே மனநலப் பிரச்னைன்னாலே சைக்கியாட்ரிஸ்ட்டிடம் போகத் தயக்கம் காட்டுவாங்க. காதல் பிரச்னைன்னா வீட்டுக்கும் தெரியாது; அப்படித் தெரிந்தாலும் பிரச்னை; அல்லது வீட்டுக்குத் தெரிந்து விட்டதால்தான் பிரச்னை. இப்படி இருக்கும்போது ஆலோசனை கேட்க யாரிட்ட போக? நண்பர்கள்ட்ட விஷயத்தைச் சொன்னா, விஷயம் வேகமாப் பரவி வெளிய தெரிஞ்சுடுமோங்கற பயம் வேற.

**சப்னா:** இதனால்தானே நம் நிகழ்ச்சிக்கு ஏகப்பட்ட ரெஸ்பான்ஸ்!

**நவீன்:** ஆமாம்! அவங்களுக்கு ஏதாவது ஒரு விதத்துல அட்வைஸ் தேவையிருக்கு.

**சப்னா:** நமக்கு வர்ற லெட்டர்களில ஒரு பொதுவான அம்சத்தை கவனிச்சியா? மதம், ஜாதி தான் காதலுக்குப் பெரும் தடைகளா இருக்கு.

**நவீன்:** ஒரு தலைக் காதலை விட்டுட்டியே! ''எனக்கு ஒருவர் மீது காதல்! ஆனால் அதை எப்படி வெளிப்படுத்துவது என்று தெரியவில்லை; நான் ஒருவரைக் காதலிக்

கிறேன்; அவர் என்னைக் காதலிக்கிறாரா என்பதை எப்படிக் கண்டுபிடிப்பது? அப்படின்னு கேட்டு எத்தனை லெட்டர்ஸ் வருது?

**சப்னா:** ஆரம்பம் முதலே ஒரு டெக்னிக்கை நான் கடைபிடிக்கிறேன். பிரச்னையின் ஆழத்தைப் புரிஞ்சுக்கிட்டு, அதற்கு என்னென்ன முறையில் தீர்வு இருக்குன்னு...... மாற்று முடிவு, அதோட பின்விளைவு எல்லாத்தையும் எடுத்துச் சொல்லி, இறுதி முடிவு எடுக்கும் வேலையை, சம்பந்தப்பட்டவர் கிட்டயே விட்டுடணும்.

**நவீன்:** ரொம்ப கரெக்ட்! இறுதி முடிவை எடுக்கும் வேலையை அவரிடமே விட்டு விடறதுதான் சரியான அப்ரோச்!

**சப்னா:** நம்ம ஆலோசனையைக் கேட்டு முடிவுகளை எடுத்து, நமக்குப் பாராட்டு தெரிவிச்சு எழுதும்போது, ரொம்ப சந்தோஷமாக இருக்கு.

**நவீன்:** நமக்கு வர்ற (காதல்) திருமண இன்விடேஷன்கள்தான் சாட்சி!

**சப்னா:** ஒரு தடவை 'உடல் ஊனமுற்ற பெண்ணைக் காதலிக்கிறேன். ஆனால், தான் ஊனமாக இருக்கறதால ஒருவித பரிதாப உணர்வில ஏற்பட்ட காதல், இதுன்னு காரணம் கூறி, காதலை ஏற்க மறுக்கிறாள்'ன்னு ஒருத்தர் கடிதம் எழுதியிருந்தாரே! ஞாபகமிருக்கா?

**நவீன்:** மறக்க முடியுமாயென்ன? "உங்களுக்கு, அந்தப் பெண் மீது ஏற்பட்டுள்ள காதல் நிஜமான அன்புதான்னு புரிய வைங்க. அவருக்கு ஊனம் காரணமாக தாழ்வு மனப்பான்மை இருந்தால், அதை அகற்றி, ஊக்கம் கொடுங்கன்னு ஆலோசனை சொல்லியிருந்தோம். கொஞ்ச நாள் கழித்து அவர்கள் காதல் வெற்றி பெற்றதே!

**சப்னா:** பிறகு, அந்தப் பெண்கூட, உடல் ஊனத்தையும் மீறி என் மனத்தை, நன்றாகப் புரிந்து கொண்டவராக ஒரு கணவர் கிடைக்கச் செய்ததற்கு நன்றி, என்று ஒரு கடிதம் எழுதியிருந்தாரே! சரிப்பா, ஊருக்கெல்லாம், காதல் ஆலோசனை சொல்லிட்டிருக்கியே நவீன்! உன் விஷயம் என்னாச்சு?"

**நவீன்:** என் அப்பாவும் அம்மாவும் லவ் மேரேஜ்தான்! அதனால் என் காதலுக்கு எதிர்ப்பு வர சான்ஸ் இல்லை. ஏற்ற மாதிரி காதலி கிடைப்பாளா?'ன்னு பார்ப்பேன். ஒரு கட்டம் வரை, அப்படி ஒருத்தி கிடைக்கலைன்னா, பெற்றோர்ட்ட சரணடைஞ்சுடுவேன். சரி! உன் விஷயம் எப்படி?

**சப்னா:** என் பாட்டி - தாத்தாவுடையது காதல் திருமணம் தான். ஆனால் என் அம்மா காதலுக்கு எமன்!

- தொகுப்பு: **எஸ். சந்திரமௌலி**

அட்டை வண்ணப்படங்கள்: **யோகா**

ரிமோட்

'அன்பே சிவம்' திரைப் படத்தின் பின்னணியை விளக்கும், மற்றும் படத்தை ஓட வைக்கும் முயற்சியாக ஒரு நிகழ்ச்சி சன் டி.வியில் ஒளிபரப்பானது. பல வருடங்களுக்கு முன்பே இந்தக் கதை கமலின் மனத்தில் உருவாகியிருந்ததாம். மாதவனின் ரோலில் கமலும், கமலின் ரோலில் எஸ்பி. பாலசுப்ரமண்யமும் நடிப்பதாக இருந்ததாம். பிறகு கமலின் பாத்திரத்தில் கமலும், மாதவனின் பாத்திரத்தில் அரவிந்த்சாமியும் நடிக்கலாமே என யோசித்தார்களாம். யோசித்துப் பார்த்தால் மூன்று விதமான தேர்வுகளுமே பொருத்தமானவைதான் என்று படுகிறது. ஆனால் எந்தவிதமான தேர்வு, வசூலையும் குவியச் செய்திருக்கும் என்ற கேள்விக்குத்தான் பதில் இல்லை.

ஜெயா டி.வியில் காலைப்பொழுதுகளில் கர்நாடக இசையைக் கற்றுக் கொடுக்கிறார்கள். அதில் முத்துசாமி தீட்சதரின் ஒவ்வொரு கீர்த்தனையிலும் அதன் ராகத்தின் பெயரும்

# வீதி நாடக இசை!



அமைந்திருக்கும் என்பது குறிப்பிடப்பட்டது. "சம்சார பீந்த்யாபதே" என்ற ஒரு வரியைக் குறிப்பிட்டு, இதிலும் ஒரு ராகம் இருக்கிறது என்றார். அது என்ன? ஆரபி (இரு வார்த்தைகளின் இணைப்பில் கிடைக்கும்)

ஸ்டார் வேர்ல்ட்டில் 'டாங்கோ' இசையைக் குறித்து ஒரு பெண்மணி தொடர்ந்து பேசினார். சிறிதுகூட அது போரடிக்காததற்குக் காரணம் வேகமாக நகர்ந்த பல்வேறு காட்சிகள். 'என் தாய் ஒரு டாங்கோ பாடகிதான். அந்தக் காலத்தில் ஒழுக்கக் குறைவான பெண்கள்தான் இந்த இசையைப் பாடுவார்கள் என்ற நிலைமை. பல தடைகளைத் தாண்டித்தான் அவரால் புகழடைய முடிந்தது'' என்றார். டாங்கோ என்று இவர் குறிப்பிடுவது அர்ஜெண்டினாவில் இப்போது பிரபலமாக இருக்கும் ஒரு வகை வீதி நாடக இசை.

காலச் சுவடுகள் பகுதியில் (ஜெயா டி.வி) நாகையில் உள்ள குழகர் கோவிலைக் காட்டினார்கள். ஆச்சர்யப்பட வைத்தது. அந்தக் கோவிலுக்கான பூட்டு, குரங்குப் பூட்டு என்று அழைக்கப்படும் ஒரு அடி உயரம் கொண்ட இந்த மிக வித்தியாசமான பூட்டு இந்த ஒரு கோவிலில்தான் இருக்கிறதாமே!

• 'அன்பே சிவம்' - மாதவன், கிரண்

- சேனல் பாய்



**பே**ரன் ராஜனுக்குக் கல்யாணம் நிச்சயமாகியிருக்கிறது என்பதை அறிந்ததிலிருந்தே சுந்தராம்பாளைப் பரபரப்பு தொற்றிக் கொண்டது. "என்னக்கி இந்த ஜமாபந்தி முடிஞ்சு நீங்க வர்றது. நான் போறேன். நீங்க அப்புறமா வந்து சேருங்க" என்று கணவருக்குக் கட்டளையிட்டு விட்டு சென்னைக்குக் கிளம்பினாள்.

தான் கொணர்ந்த வேர்க்கடலை மூட்டையைப் பேரனின் கைகளில் திணித்தாள். 'எப்படிடா இருக்கே என் தஞ்சாவூர் கோபுரமே' என்றபடி அவன் கைகளைப் பாசத்துடன் பற்றிக் கொண்டாள். நிழல் விழாததைக் கேள்விப்பட்டதிலிருந்து பேரனை இப்படித்தான் விளிக்கிறாள்.

தன் பேரனின் பொண்டாட்டியை உடனே பார்க்கத் துடித்தாள். ''எல்லாம் அவங்களே வருவாங்க'' என்று மருமகள் கூறியது பிடிக்கவில்லை. பேரனைப் பார்த்து ''வாயேண்டா. உனக்கும் சாவித்ரியை இன்னொரு தடவை பார்த்த மாதிரி இருக்கும்'' என்று பாட்டி முடிக்கு முன்பே சென்ட் பாட்டிலைத் தன் மீது கவிழ்த்தபடி ராஜன் கிளம்பி விட்டிருந்தான்.

''எம் பேரன் கிடைக்க நீ கொடுத்து வச்சிருக்கணும்' என்று சாவித்ரியின் கன்னத்தை வழித்தாள். சாவித்ரியை உரிமை பொங்கப் பார்த்த பேரனின் கண்களில் காதல் கட்டுங்கடங்காமல் பொங்குவதை அவளால் உணர முடிந்தது. ஆனால் சாவித்ரியின் தங்கைக்காரி எதுவும் பிடிகொடுத்துப் பேசாததுடன், தான் பாட்டுக்குக் கல்லூரிக்குக் கிளம்பியதைப் பார்த்ததும் எரிச்சலாக இருந்தது. அது என்ன மதிக்காத தன்மை? "ஊரிலிருக்கும் கர்வக்காரப் பயல் மாதவனுக்கு இந்தத் தங்கைக்காரியைக் கல்யாணம் செய்து

வைக்க வேண்டும். அப்போதுதான் கொட்ட மடங்கும்" என்று கறுவிக் கொண்டான்.

"பாட்டி இங்கயே இருக்கட்டும். நான் மத்தியானம் கொண்டு விடறேன்" என்று சாவித்ரியின் அப்பா கூற, பாட்டியும் அதற்கு சம்மதித்ததில் ராஜன் கிளம்பினான். 'இருக்கட்டும், தன் வருங்காலப் பெண்டாட்டியைப் பற்றிய பல விவரங்களைப் பாட்டி சாமர்த்தியமாகச் சேகரித்து வந்து சொல்வாள்'.

"பக்கத்திலே ஒரு கோவில் இருக்கு. நல்லாயிருக்கும். வாங்களேன், போயிட்டு வரலாம்" என்று சாவித்ரியின் அப்பா கூப்பிட்டார். "எனக்குச் சமையல் வேலை சரியா இருக்கும்" என்று சாவித்ரியின் அம்மா "இவளும் எனக்குக் கூடமாட ஒத்தாசையா இருக்கட்டும்" என்று சாவித்ரியையும் தக்க வைத்துக் கொண்டதில் ஏதோ சதி தெரிந்தது. இருந்தாலும் வருங் கால சம்பந்தியுடன் கிளம்பினாள் பாட்டி.

'என்னப்பனே விநாயகா, ஹரஹர மகாதேவா, அம்பிகே பரமேஸ்வரி' யெல்லாம் முடிந்து சண்டிகேஸ்வரரிடம் கைதட்டி ஆஜர் சொல்லிவிட்டு கொடி மரத்துக்கெதிரே விழுந்த பிறகு "ரெண்டு நிமிஷம் உட்காரலாம்" என்றாள் பாட்டி. "இதற்குத்தானே காத்திருந்தேன்" என்பது போல் அருகில் உட்கார்ந்தார் சாவித்ரியின் அப்பா.

"உங்க பேரன் கொஞ்சம் வித்தியாசமானவர் இல்லையா?" என்று பேச்சைத் தொடங்கினார்.

பாட்டிக்குப் புரிந்து விட்டது. இருந்தாலும் 'மாப்பிள்ளை' என்று ராஜனை கம்பீரமாகக் குறிப்பிடாமல், இப்படிக் கேட்டதில் அவளுக்குச் சின்ன வருத்தம் உண்டானது.

"என்ன வித்தியாசம்?" என்று வீம்புக்காகக் கேட்டாள்.

"அதான் அந்த நிழல் விஷயம்."

"அதெல்லாம் பகவானுடைய அருள்'' என்று பாட்டி பரவசமாகச் சொன்னதும் ஈஸ்வரனின் வாய் அடைத்து விட்டது. சத்தம் போடாமல் வேலை நிறுத்தத்தை வாபஸ் வாங்கிக் கொள்ளக்கூடிய அரசு ஊழியரின் மனநிலைக்கு வந்து விட்டார். இருந்தாலும் 'எஸ்மா பாயாது இல்லையா?' என்பதுபோல் ஒரு சின்ன உத்தரவாதத்தை வாங்கிக் கொள்ளும் சபலம் அவருக்கும் இருந்தது.

"எனக்கு ஒண்ணுமில்ல. உங்க பேரன் பேரிலே கிள்ளுக்கிரை சந்தேகமும் இல்ல. ஆனா என் ரெண்டாவது பொண்ணு சுஜிதா தான் குளத்தில கல்லப் போட்டுட்டா'' என்று தொடங்கினார்.

''என்ன கல், வைரமா? வைடூரியமா?"



''மனசிலே குழப்பத்தை உண்டு பண்ணிட்டா'' என்றபடி அவளது பயங்கர ஐயத்தை நாசூக்காகச் சுட்டிக் காட்டினார்.

பாட்டி சத்தம் போட்டுச் சிரிக்க, கவரிலிருந்த பல்லி ஒன்று தனக்கருகிலிருந்த இரையைக் கூட விட்டு விட்டு, வேகமாக நகர்ந்தோடியது.

"என் பேரன் ரத்தக் காட்டேரியா? ஹஹ்ஹ! என் மாமனாரைப் பற்றிக் கேள்விப்பட்டிருக்கீங்களா?"

அருண் சரண்யா



## புரிதல்

- நீ வந்து போன
அடையாள மெனினும்
காத்திருத்தலின்
மன அழுத்தம்
பதிவு செய்யப்பட்டிருக்கிறது
உன் பாதச் சுவடுகளில்

- எனக்கிதைப்
புலப்படுத்தும்
பொருட்டே
அழிக்கத்
தயங்குகின்றன
அலைகள்.

"இல்லை." ஒருவேளை அவர்தான் ரத்தக் காட்டேரியோ? ஈஸ்வரனுக்கு உடல் நடுங்கத் தொடங்கியது.

சுந்தராம்பாள் தொடர்ந்தாள். "என் மாமனாரின் சித்தப்பா பற்றி?"

"இல்லை." இப்போது அவரது மலேரியா நடுக்கம், மனைவியிடம் ஏற்படும் நடுக்கமளவிற்கு அதிகமாகியிருந்தது.

"அவங்களுக்கெல்லாம் கூட நிழல் சரியாக விழாது. மத்தவங்களுக்கு விழுவதில் பாதிதான் விழும். பரிணாம வளர்ச்சியிலே குடல்வால் சுருங்கிச் சுருங்கிக் குறைஞ்சதா சொல்வா இல்லையா? அந்தமாதிரி இதெல்லாம் ஏதோ ஜீன்ஸ் விஷயம். பரம்பரையா வரது. சிலருக்குப் பரம்பரையா அறிவு இருக்காது. என் பேரனுக்கு நிழல்தானே இல்லாம போயிடுச்சு? உங்க ரெண்டாவது பொண்ணைக் கண்ட டீ.வி சீரியலையெல்லாம் பாக்க வேண்டாம்னு சொல்லுங்க. குழந்தைகளுக்கான சீரியலையெல்லாம் சீரியஸா எடுத்துப்பா போலிருக்கே."

ஈஸ்வரன் பாட்டியையே பார்த்துக் கொண்டிருந்தார்.

"என்ன மௌனமாயிட்டீங்க? நம்பிக்கை வரல்லையா?"

"எனக்கு நிறைய அமைதி தந்துட்டீங்க பாட்டி. நான் புத்தர்னா நீங்க போதிமரம். நான் தட்சிணாமூர்த்தின்னா நீங்க ஆலமரம். நான் கர்ப்பிணின்னா நீங்க அரசமரம்"

"அதோட நிறுத்திக்குங்க. அடுத்தது 'நான் வேதாளம்னா நீங்க முருங்கமரம்'"னு சொல்லிட்டுப் பழைய விஷயத்துக்கே போகாதீங்க."

பாட்டியின் நகைச்சுவையில் ஈஸ்வரன் தன் சந்தேகத்தைத் துறந்தார். மலர்ச்சியுடன் எழுந்து கொண்டார்.

"இன்னைக்கு வீட்டிலே கோதுமை அல்வா செய்யறா. மாப்பிள்ளைக்குப் பிடிக்குமாமே. டிபன் பாக்ஸிலே தரேன். மறக்காம எடுத்துக்கிட்டுப் போங்க."

மாப்பிள்ளை! பாட்டியின் முகத்தில் புன்னகை பூத்தது.

'மறக்காமல் செய்ய வேண்டியது இன்னொன்றும் இருக்கிறது. வீட்டுக்குப் போனவுடன் தன் மாமனார் சம்பந்தப்பட்ட புகைப்படங்களை எடுத்து மறைத்து வைத்து விட வேண்டும். எதிலாவது அவர் நிழல் தெரிந்து, தன் சாயத்தை வெளுக்க வைத்து விடக் கூடாது' பாட்டி புடைவையில் முடி போட்டுக் கொண்டாள்.

அதேசமயம் சாவித்ரியின் அம்மா விதவிதமான கேள்விகளால் தன்னையே குடைந்து கொண்டிருந்தாள். 'கால்ஷியம் சத்துக் குறைவு என்றால் பல் கெட்டுப் போகும். வைட்டமின் ஏ குறைந்தால் கண் பார்வை மங்கலாகும். இப்படி ஏதோ இல்லாமல் போனால்தானே உடலில் கோளாறு ஏற்படும்? நிழல் விழாமை என்ற கோளாறுக்கும் உடம்பில் ஏதோ சத்து இல்லாததுதானே காரணமாக இருக்க முடியும்? கோளாறுள்ளவனுக்கு மகளைக் கொடுப்பது சரியா? முறையா?"

"இப்பக் கூட ஒண்ணும் கெட்டுப் போகல்ல சாவித்ரி" என்று தொடங்கினாள்.

"ஆமாம்மா. மீந்ததையெல்லாம் நேத்தே ஃப்ரிஜ்ஜில வச்சுட்டமே. எப்படிக் கெட்டுப் போகும்" என்றாள் சாவித்ரி. தான் கூறியது புரியாத மாதிரி நடிக்கிறாள்.

மகள் மனத்தில் அந்த ராஜன் ஆழ்ந்த சலனத்தை ஏற்படுத்தி விட்டது புரிந்தது. அக்கம்பக்கத்தில் விசாரித்ததில் அவனைப் பற்றி யாரும் தவறாகச் சொல்லவில்லை. 'வேறு வழியில்லை. சந்தேகத்தின் பலனை அவனுக்குக் கொடுக்க வேண்டியதுதான். மற்றபடி இன்னேரம் ராஜனின் பாட்டியிடம் தன் கணவர் ஏதாவது விவரத்தைச் சேகரித்திருப்பார். பார்ப்போம்."

(தொடரும்)



# பாப்கார்ன்

'பாப் கார்னிவல்' என்ற இசை விழாவின் பெயர்ச் சுருக்கம் பாப்கார்ன். *மனசிலாயோ?*

பதினெட்டு வருடங்கள் கழித்து ஒன்று சேருகிறது மோகன்லாலின் கலைக் குடும்பம், இந்த விழாவில். சிம்பிள் கதையாக்கும் _ பட்டை, சோம்பு, லவங்கம் கலக்காத.

ஆனால் உப்பு, காரம் கொஞ்சமாவது வேண்டாமோ? 'அடடா', 'அச்சச்சோ', 'அடப்பாவி', 'அப்பாடா'... இந்த ரீதியில் எந்த உணர்ச்சியும் துளியும் ஏற்படாமல், முற்றும் துறந்த முனிவர்களாய் உட்கார்ந்திருக்கிறோம் ஆடியன்ஸ். இந்த நிலைமைக்கு டைரக்டர் நாசர் தான் *விளக்கம் பறையணும்!*

ஹீரோ பாடுவது ஃப்யூஷன் மியூஸிக்காம். ஹீரோயின் ஆடுவது ஃப்யூஷன் டான்ஸாம். கமர்ஷியல் ஆஸ்பெக்ட்டுக்காக 'ஃப்யூஷன்', புரிகிறது. ஆனால் நான்கு வரிகளைக் கர்நாடக இசை பாணியிலும், நான்கு வரிகளை 'பாப்' ஸ்டைலிலும், அதற்கடுத்த வரிகளை கானா டைப்பிலும் பாடுவது ஃப்யூஷனும் அல்லா (*யுவன் என்னோடு க்ஷமிக்கணும்*) சந்திரலேகா ஸ்டைலில் நாட்டியம் பண்ணிவிட்டு பாரம்பரியம் கலந்த ஃப்யூஷன் டான்ஸ் என்று சொல்வது நியாயமும் *அல்லா!*

அடிக்கடி முழு நீள ஆங்கில வசனங்கள் ஏன்? பலன்: "யோவ்... முதல்ல தமிழில் பேசுங்கப்பா" என்று வந்திருக்கும் சொற்ப மனுஷாளும் ஆத்திரப்படுகிறார்கள்.

லாலுடைய நடிப்பைப் பற்றிக் குறை சொன்னால், *என்டே* குருவாயூரப்பன் க்ஷமிக்க மாட்டார். ஆனால் அண்ணா தமிழ் பேச கொறச்ச கூடி ப்ராக்டீஸ் செய்யணும். 'இந்த பாஷையை எங்கேயோ கேட்ட மாதிரி இருக்கே' என்று அடிக்கடி முழிக்கிறோம்.

சிம்ரன் நடிப்பு ஓ.கே. பெங்காலி கெட் - அப் டபுள் ஓகே.

'சிங்கப்பூர் ஏர்லைன்ஸ் வாசனையோடு *யாராணது?*' _ ஓ _ சிம்ரன்ட தங்கை ஜோதி *அல்லே?*

விவேக்கின் வசன நீளம் ட்ரிம் செய்யப் பட்டிருக்கிறது. சந்தோஷம்.

க்ளைமாக்ஸில் சண்டையைத் தவிர்ப்பது ஆகட்டும், ஜோதி டி.வி. மூலமாக அம்மாவிடம் அப்பீல் செய்வது ஆகட்டும், மோதிரத்தை சிம்பாலிக்காகக் காட்டி, லால் _ சிம் ஒன்று சேர்வதாகட்டும் _ நாசருக்கு அலட்டிக் கொள்ளாமல் கதை சொல்லத் தெரிந்திருக்கிறது என்பது நிஜம். அது போதுமா?

• ஆவெரேஜ்

— கிருஷ்ணா சிதம்பரம்

"நெருப்போடு பேச அழைக்கிறான் நாவை அறுத்த ஸ்திரிமுக நடிகன். துடிக்கும் அறுபட்ட நாவிலிருந்து தெறித்துப் பரவும் உதிரம் அதிர வருகிறேன். ரத்தத்தில் ஊர்ந்து வரும் ஒப்பனைக் குரல்கள் நரம்புகளில் தாவிக் கூசி கூசி எரியும் சுடரிடம் பேசி பேசி வருகிறேன்."



'கூந்தல் நகரம்' நவீன நாடகத்தின் தொடக்கம்தான் இது. சுதந்திரப் போராட்டக் காலத்தில், வெள்ளை அரசு வதைத்துக் கட்டுப்படுத்தியதால் ஆத்திரமடைந்த அன்றைய புகழ்பெற்ற நாடகக் கலைஞர் மாரியப்ப சுவாமி என்பவர், மேடையிலேயே தன் நாக்கை அறுத்தெறிந்து ருத்ர தாண்டவம் ஆடினாராம். அந்த உண்மை நிகழ்விலிருந்தே ஆரம்பித்தார்கள்.



முழுக்க முழுக்க நவீன கவிதை வடிவில், ஆழ் மன உணர்வுகளை விழிக்கச் செய்யும் வரிகளில் வசனங்கள்!

"சுதந்திரப் போராட்டக் காலத்தைப் பின்புலமாகக் கொண்டது இந்த நாடகம். ஆங்கிலேய அரசின் தண்டனைகளும் அடக்கு முறைகளும், நாடகக் கலை மீதும் கலைஞர்கள் மீதும் கொடூரமாக ஏவப்பட்ட நிகழ்விலிருந்துதான் இந்நாடகம் உருவானது. நாடகக் கலையின் தலைநகராக விளங்கியது மதுரைதான். அதைக் குறியீடாகக் கொண்டு கூந்தல் நகரத்தை உருவாக்கினோம்" என்கிறார் இந்நாடகத்தை நிகழ்த்திய முருகபூபதி!

இந்நாடகம் நடந்தது விளாத்திகுளம் அருகில், சிவப்பான குறுமணல் திட்டுகள் கவிந்த தேரிகாட்டில்.

"ஏற்கெனவே திருவண்ணாமலை காட்டில் 'வனத்தாதி' நாடகத்தை நடத்தியிருக்கிறேன். பழந்தமிழர்கள் நிலத்தை ஐவகையாகப் பிரித்து அதனதன் பண்பாட்டிற்கேற்ப நாடக மேடை இலக்கணங்களை வகுத்திருக்கிறார்கள். அந்த வகையில் செம்பாலை பூமியான தேரிகாட்டில் இதை நடத்தியிருக்கிறோம்" என்கிறார் முருகபூபதி. நகரங்களின் மூடிய சுவர்களில் அடைபட்டு கிடக்கிற நவீன நாடகத்தை மக்களிடம் கொண்டு செல்லத் துடிக்கும் இந்த முருகபூபதி, மதுரகவி பாஸ்கரதாஸின் பேரன்!

— ஏக்ஜி

• முருகபூபதி



# காட்டுக்குள்ளே திருவிழா!

ஹிந்துத்வா பற்றி வாசகர்களிடம் கருத்துக் கேட்டோம். வந்து குவிந்த ஏராளமான கருத்துக்களில் பிரசுரத்திற்கும் பரிசுக்கும் தேர்வானவை கீழே!

# 'ஹிந்துத்வா'

## நீயே அதுவாக!

த்வம், தத் என்னும் சொற்கள் முன்பின்னாக மாறி, நீயே அது எனப் பொருள் தந்து, தத்துவம் ஆகியிருக்கின்றன. அதற்கு முன் ஹிந்து நிற்கிறது.

எந்த மதமாயினும், நீயே அதுவாக – அதாவது கடவுளாக இருக்கிறாய், என மனங்கொள்ளும் மகத்தான நிலையினை மனிதனுக்கு உணர்த்த வேண்டும். ஹிந்துத்வா என்பது, இந்த மேலான உணர்வினை மனித மனத்தில் விதைப்பதற்கு உருவாக்கப்பட்ட, உயரிய கொள்கை. மத வேறுபாடு கருதாது இதனை மனித நேய உணர்வுடன் ஹிந்துத்வா எனக் கொள்ளலாம்.

**- ஞா.இராசமாணிக்கம், கோவில்பட்டி**

## ஒரு தத்துவம்!

தர்மத்தின் வழிப்படி, நடக்கக் கூறும் பொதுச் சொத்து ஹிந்துத்வா. சொந்த ஆசை, விருப்பங்களுக்கு ஏற்ப தர்மத்தை வளைத்துப் பலி கொடுப்பது அரக்கத்துவா. நல்லவர்க்கு ஹிந்துத்வா மனித நேயம். அரக்கருக்கு அது மத வேஷம்.

***- டி. சீனிவாஸ சுதர்ஸனன், கோயம்புத்தூர்***

### வெறுப்பைத் தூண்டாதது!

**தா**ராள மனப்பான்மையைக் குறிப்பதும், எவரிடமும் துவேஷம் காட்டாததும் ஆகும். அதே நோக்கில் எந்த இக்கட்டான சூழலிலும் வெவ்வேறு மதங்களுக்கிடையேயும், சமூகங்களுக்கிடையேயும், வெறுப்பையோ, வன்முறை எண்ணத்தையோ தோற்றுவிக்காமல் இருப்பதுதான் ஹிந்துத்வா!

**- ஆர்.ராமசுப்ரமணி, திருவாரூர்.**

### வாக்குத்துவம்!

**இ**ந்து மக்களின் மத நம்பிக்கையைப் பயன்படுத்தி மூட நம்பிக்கைகளையும், மதமாச்சார்யங்களையும் வளர்த்து, பிரிவினை வாதத்தை ஊக்குவித்து வாக்கு வாங்கும் அரசியல்வா(வியா)திகளின் வாக்குத்துவமே 'ஹிந்துத்வா'!

**- இந்துமதி, நாகப்பட்டினம்**

# த்வா ?

### புனை பெயர்!

**ஹி**ந்துத்வா என்பது புனை பெயர். அதற்கு இயற்கை என்பது இயற் பெயர். எல்லாவற்றையும் படைத்து, தீயவற்றை அழித்து, தர்மத்தைக் காக்கும் பரம்பொருள் எங்கோ மறைந்தோ, எங்கும் பரந்தோ இருக்கும் ஒன்று. அந்த ஒன்றின் படைப்புகள் அனைத்தையும் நேசிக்கும் மனிதத்தன்மையே ஹிந்துத்வா!

**- பி. பத்மா, கோவை**

### வாழ்வியல் கலாசாரம்

**சை**வம், வைணவம், சாக்தம், காணாபத்யம் போன்றவை மதங்கள், ஹிந்துத்வா மதம் அல்ல. முஸ்லிம்களான முகலாய பாபர் முதல் பாரசீகத்து நாதிர்ஷா வரை, ஹிந்துஸ்தான் என்று குறிப்பிட்ட நிலப்பரப்புக்குரியதும், கிறிஸ்தவர்களான அன்னி பெசன்ட்டும், சகோதரி நிவேதிதாவும் தம்மை அர்ப்பணித்துக் கொண்டதுமான வாழ்வியல் கலாசாரமே ஹிந்துத்வா.

**- பிரகதீஸ்வரி, இராஜப்பன்**

இரண்டான மூச்சு
ஒன்றாகும் போது
தெய்வீகம்
ஒன்றான தேகம்
இரண்டாகும்போது
பொய்க் கோபம்

எது காதலென்று யாராலும் விவரிக்க முடியாது. சிலருக்குத் தவிப்பது. சிலருக்கு நினைப்பது. சிலருக்குத் துடிப்பது. சிலருக்கு நடிப்பது. சிலருக்குச் சுவைப்பது. சிலருக்குத் துவைப்பது. யாருக்கு என்ன விதமாகத் தேவைப்படுகிறதோ, அந்தந்த விதத்தில் தன்னை உருமாற்றிக் கொள்கிறது காதல். எனில், அது பச்சோந்தியல்ல. மனோரஞ்சிதம்!

காதல் மீதிருக்கும் பொதுவான கருத்து என்னவென்றால், அது எப்போதும் இம்சித்து, எப்போதாவதுதான் சந்தோஷத்தைத் தருகிறது. சிந்தைகளால் ஒன்றுபட்ட சமூகம் கைரேகைகளில் பிரிந்து கிடப்பதைப் போல, இம்சைகளால் ஒருங்கிணைந்த காதலின் அர்த்தம் இயற்கையால் வித்தியாசப்படுகிறது.

எதற்காகவும் காத்திருக்க விரும்பாத ஒருவனை, எவ்வளவு நேரமும் காத்திருக்கத் தயாராக்குகிறது காதல். எதற்கும் கோபப்படுகிற ஒருத்தியை எதற்காகவும் கோபப்படாதவளாக மாற்றிவிடுகிறது காதல்.

அதுவரை உடைமீது கவனம் செலுத்தும் ஒருவன், அதற்குப் பிறகு அவளைச் சந்திப்பதற்காக கசங்கிய ஆடையோடு ஓடி வருகிறான். அதுவரை உடைமீது கவனம் செலுத்தாத ஒருத்தி, அதற்குப் பிறகு அவனுக்குப் பிடிக்குமா? என எச்சரிக்கையோடு ஆடை உடுத்துகிறாள்.

இவள் அலங்காரம் அவனுக்காக. இவன் துக்கம் அவளின் சந்தோஷத்திற்காக. இவள் மௌனம் அவளின் நாவிலிருந்து வரப்போகும் கவிதைக்காக. இவள் கவிதைகள் அவனது தனித்த இரவுகளின் செலவுக்காக.

பூனையைப் போல
ஓசைப்படாமல் உள்ளே வந்து
பசித்த சிறுத்தை போல
அறைந்துவிட்டுச்
செல்கிறது
உன் நினைவு

பசித்த சிறுத்தைகளின் முரட்டுத் தாக்குதல் நினைவுகளின்மீது நிகழும்போது தப்பிக்க வழியற்றுப் போகிறது. முயல்களையும் அசைவம் உண்ணச் செய்கிறது. கவிஞர் தமிழ் நாடனின் கவிதைகள் மிகுதியும் சிவப்புச் சிந்தனைகளால் சிருஷ்டிக்கப்படுபவை என்றாலும், இக்கவிதை நீல நிறத்தைக் கொண்டிருக்கிறது. நீலம் சௌந்தர்யத்தின் வண்ணம். கலைஞர், ஆய்வாளர், கட்டுரையாளர் என பன்முகத்தைத் தன் முகமாகக் கொண்டவர் என்பார் பாலா. இவர் வானம்பாடிகளின் சிறகுகளுக்குச் சொந்தக்காரர். அவளது காதல் பாதம் அனுகுண்டுகளை விதைத்தாக எழுதுகிறார்.



**யுகபாரதி**

உனது அனிச்ச
மெல்லடி
அணுகுண்டுகளை

# காதல் பிசாசே

## 16

விதைத்துச் செல்கிறது
மழைத்துளிகளின்
தொடர்த் தாக்குதலுக்கு
அஞ்சாத பயிர் போல
பொழுதும் வளர்கிறது
என் ஆவல்

துளியாக விழுந்தால் மழை. தொடர்ந்து விழுந்தால் தாக்குதல். தாக்குதலுக்கு அஞ்சிய பயிர் வளராது. அவஸ்தைகளுக்குப் பயந்த மனதால் காதலைத் தொட முடியாது. என் வீட்டில் ஜன்னலில் தெரிந்த நிலவு காதலாகி விடுகிறது. என் நாசியில் மூச்சாக இருந்த காற்றுப் புயலாக மாறி விடுகிறது. என் ஆடையில் மலராகத் தங்கியிருந்த ஆசை உடம்பாகி விடுகிறது. இதெல்லாம் ஒரு தேர்ந்த காதலனின் இதயக் குறிப்புகள்.

ஒருவனின் ஜாதியைத் தெரிந்துகொள்ள பழம்பெரும் கிழவிகள் சுற்றி வளைத்துப் பேசுமே, அதுபோல, எங்கெங்கோ தொட்டு, தொடர்ந்து கடைசியில் காதல் வந்தடையும் இடம் எது? கிழவிகளின் கேள்வியில் பழைமையிருக்கும். காதலின் பதிலில் புதுமை பிறக்கும். எழுத்தே எல்லாம் என்று நினைக்கிற எழுத்தாளன் கூட தன் பிரியத்தைப் புத்தகத்தில் தான் சமர்ப்பிக்கிறான். ஆனால், காதலோ தன் பிரியத்தையும் உயிர்மேல் சமர்ப்பிக்கிறது. யாருக்கும் தெரியாத ஆத்ம சுத்தியைப் பரிபூரணமாகத் தன்மேல் பூசிக் கொள்கிறது இளமை.

ஓசைப்படாமல் நடந்துவரும் பூனையை நினைவென்கிறார் தமிழ் நாடன். அதே பூனை, உருட்டிக் குடிக்கிறது இரத்தத்தை, பாலை நிலவனின் கவிதையில்

பூனை பார்த்ததுண்டா?
அறிவாயா அதன் நடை..?
திருட்டுப் பூனை நான்
ஓடிக்குதித்து அறை நுழைந்து
சப்தமெழுப்பி
பாத்திரம் உருட்டி
உறிஞ்சி உறிஞ்சிக் குடிக்கிறேன்
உயிர் இரத்தம்
உன்

திருட்டுப் பூனையைப் போல் அங்கு மிங்கும் கண் பரப்பி அச்சத்தோடு நிகழ்கிறது விளையாட்டு. வெளியே கிளம்பும்

போது பூனைகள் குறுக்கே வந்தால் சகுனம் சரியில்லை என்பார்கள். சகுனம் சரியில்லை என்பதற்காக, ஒட்டுமொத்தப் பூனைகளையும் சட்டம் போட்டுத் தூக்கிலிடவா முடியும்? புலி பசித்தாலும் புல்லைத் தின்னாது. பூனை பசிக்காவிட்டாலும் பாலை உருட்டித்தான் குடிக்கிறது. இன்னொரு பூனையை 'நதியின் குதர்க்கம்' தொகுப்பில் காணலாம். கோலாகல ஸ்ரீநிவாஸ் எழுதியது.

**நீண்டு கிடந்தது நிழல்**
**ஒரு புலியாய்**
**படுத்துக் கிடந்தது**
**பூனைதான்**
**'நான் அற்று இருந்தது**
**என் நிழல்' எனில்,**
**நிழலாய்க் கிடந்தது**
**எது?**



நானற்றுப் போதல் ஞானம். நான் மட்டும் என்பது காதல், இந்த நுட்பம் மிகமிக மெல்லிய இழைகளால் உணரப்பட வேண்டியது. நான் மட்டும் ரசிக்கத்தக்க, நான் மட்டும் வியக்கத்தக்க, நான் மட்டும் உணரத்தக்க என உரிமை கொண்டாடுதல் காதலின் பெருமை. அது எப்படிப்பட்ட இம்மை என்பது கூட நான் மட்டுமே அனுபவிக்கத்தக்கது.

**கொ**ண்ட காதலின் கொடூர நெருப்பில் தகித்துக் கொண்டிருந்தான் அம்பிகாபதி. கம்பருக்கு மகனின் நெருப்பை விடவும், தான் கொண்டிருக்கும் பொறுப்பின்மீது குற்றம் நேருமோ என்கிற பயம். அரசகுமாரியை மருமகளாக அடையப் போகும் சந்தோஷமில்லை இவர் நெஞ்சில். மாறாக, கவலையிலிருந்தது. சபையில் கவிதை உரைக்கச் சொன்னால், மறைவில் நிற்கிற மனசைப் பற்றிப் பாடுகிறான் அம்பிகாபதி. அமராவதி மீது அளவு கடந்த பிரியத்தில் சிம்மாசனத்தை நெட்டித் தள்ளவும் நினைக்கிறான்.

'உன் போக்குச் சரியில்லை, பார்த்துக் கொள்' என இந்த நூற்றாண்டு அப்பாக்களைப் போலவே அவரும் நடந்து கொண்டிருக்கிறார். எச்சரிக்கிறார். அன்போடு தட்டிக்கொடுத்து அறிவுரை சொல்கிறார். எதையும் கேளாமல் அம்பிகாபதி இதழ் மலர்ந்தான். அந்த மலர்ச்சியில் அப்பாவுக்கான மறுப்பல்ல, காதலின் சிறப்பிருக்கிறது.

**உருகி உடல்கருகி**
**உள்ளீரல் பற்றி**
**எரிவ தவியாது**
**என் செய்வேன் - வரியரவ**
**நஞ்சிலே தோய்ந்த**
**நளினவிழி வெண்பெருமாள்**
**நெஞ்சிலே யிட்ட**
**நெருப்பு**

கலைமகளின் அன்பிலே மூழ்க வேண்டிய அம்பிகாபதி, காதலின் நெருப்பிலே மூழ்கிக் கருகிக் கொண்டிருந்தான். நஞ்சிலே தோய்ந்த நளினவிழியால் பார்வையை இழந்து கொண்டிருந்தான். இறுதியில், என்ன நேர்ந்தது? அழியாத காதல் தேரின் வடமானார்கள். கண்ணீரைத் தேக்கிக் கொண்ட குடமானார்கள்.

**எ**தற்காகவும் அழத் துணியாத ஒருவனை, கதறக் கதற அழவைக்கிறது. எதற்காகவும் விழத் துணியாத ஒருத்தியை, பதறப்பதற விழவைக்கிறது. இரண்டு துருவங்களின் நுனியையும் கொண்டிருக்கும் காதலை என்னவென்று புரிந்து கொள்ள இயலாது. எது காதலென்று விவரிக்கவும் முடியாது.

(தொடரும்)

# ஸ்வர்ணமால்யாவின் காதல் கதை!

வஸந்த் செந்தில்



"மால்யா...நான் சொல்லல... சித்தார்த்... இவன்தான்... என் ப்ரண்டோட பையன்..."

ஸ்வர்ணமால்யா வாசித்துக் கொண்டிருந்த புத்தகத்தை இலேசாக மடக்கிக் கொண்டு சுவாரசியமில்லாமல் பார்த்தாள்.

நல்ல நிறத்தில் விளம்பரப் படத்தில் நடிக்கலாம் போல இருந்த சித்தார்த், வசீகரமாகப் புன்னகைத்து அவள் முன் அமர்ந்தான். அமர்ந்தவுடன் அவனாகவே ஆரம்பித்தான்.

"லாவோட்சுவா? இப்ப 'லேட்டர் டீச்சிங்ஸ்' வந்திருக்கே... பாத்தீங்களா? பதினாலாவது நூற்றாண்டுல அவர் பேச்சையெல்லாம் தடை பண்ணி வச்சுட்டாங்க..."

ஸ்வர்ணமால்யா சட்டென்று நிமிட ஆச்சர்யம் காட்டினாள். அவள் அப்பா மலர்ந்து "ஸ்மார்ட் பாய்..." என்றார்.

சித்தார்த், "ஆமாங்க... 'மாஸ்டர் நீ' தான் அவரோட மேனுஸ்கிரிப்டெல்லாம் காப்பாத்தி தொகுத்தார்..." என்றான்.

ஸ்வர்ணமால்யா, "பரவாயில்லை..." என்றாள்.

சித்தார்த் மெல்ல தலையாட்டிக் கொண்டே, "எதிராளி பரவாயில்லைன்னு சொன்னா உங்களோட பேச விரும்பறாங்கன்னு எரிக் வாட்ஸன், 'தி ஆர்ட் ஆஃப் கான்வர்சேஷன்' புக்ல சொல்றார்..." என்றான்.

ஸ்வர்ணமால்யா தன் கையில் வைத்திருந்த புத்தகத்தை மூடி, முன்னால் இருந்த மேசையின் மேல் வைத்தாள்.

"உங்க பேர் என்ன சொன்னீங்க?"

அவள் அப்பா அமைதியாக இருவரையும் பார்த்துக் கொண்டிருந்தார். அவர் எதிர்பார்த்த ஏதோ ஒண்ணு நடக்கப் போவதற்காக அவருடைய விழிகள் காத்திருந்தன.

"சொன்னேனே சித்தார்த்..'' என்றவன் தொடர்ந்து, "கண்டிப்பா காலேஜ்ல லிட்ரேச்சர் படிக்கல" என்றான்.

ஸ்வர்ணமால்யா திடீரென்று சற்று கடுமையாகி, "நீங்க என்ன படிச்சிருந்தாலும் உங்களைக் கல்யாணம் செஞ்சுக்க முடியாது" என்றாள்.

"மை குட்னஸ்..." என்று போலியாகக் கவலைப்பட்ட சித்தார்த், "ஏன்?" என்றான். ஸ்வர்ணமால்யாவின் அப்பா கவலையாகி, "மால்யா.. சித்தார்த் ரொம்ப நல்ல பையன்... டீடோட்டலர்... உன்ன மாதிரி கண்டபடி புஸ்தகம் படிப்பான். பேசிப்பாரு" என்றார்.

ஸ்வர்ணமால்யா, "நார்மன் மெய்லரோட கட்டுரை எடுத்துத் தரவா? எங்கிட்ட இருக்கு" என்றாள்.

சித்தார்த், "நான் ஏன் திருமணம் செய்து கொள்ளவில்லை? அதானே... பூனைக்குட்டி கம்பேரிஸன்" என்றான் அலட்டாமல்.

"படிச்சிருக்கீங்க இல்ல?" என்ற ஸ்வர்ணமால்யா எழுந்து சென்று அருகில் இருந்த ஜன்னலைத் திறந்தாள். காற்று வேகமாக உள் நுழைந்து புத்தகங்களைக் கலைத்தது.

சித்தார்த், "இந்த காத்து அடிக்கறதைப் பாத்தா ode to



the westwind்னு ஷெல்லி எழுதினது ஞாபகத்துக்கு வருது'' என்றான்.

ஸ்வர்ணமால்யா சின்னதாக அவன் மேல் கவனம் செலுத்த ஆரம்பித்தாள். அதைக் கவனித்த அவளின் அப்பா மெல்ல எழுந்து "நீ பேசிட்டிரும்மா... நான் காபி கலக்கிட்டு வர்றேன்'' என்று கிளம்பினார்.

சித்தார்த், ''ஆனா பாருங்க... அதுல ஷெல்லி கடைசியா If winter comes can spring be far behind்னு நம்பிக்கையா முடிச்சிருப்பார். இதோ உங்க ஷெல்ப்ல 'நெடுநல்வாடை' இருக்கு... அதுல அப்படி நம்பிக்கையாவே வராது.. அப்புறம் நெடுன்னு வந்தப்புறம் எப்படி நல்லது வரும்?'' என்றான்.

ஸ்வர்ணமால்யா குறுக்கிட்டாள்... ''இல்ல சித்தார்த். வெற்றிக்கப்புறம்தானே பாட்டு எழுதப்பட்டது. அதான்... 'நல்' வார்த்தை கூட சேர்ந்து வருது...'' என்றாள்.

''பரவாயில்லையே... உங்க கூட பேசற அளவுக்குச் சுமாரா படிச்சிருக்கேன் இல்லை...'' என்றான் சித்தார்த்.

"இந்த மாதிரி வாசகம் ஒரு தற்புகழ்ச்சி... இதுக்கு பின்னாலே, அழகு என்கிற ஒரு அம்சம் ஒளிஞ்சுக்கிட்டு இருக்கறதா எமர்ஸன் சொல்றார்...'' என்றாள் ஸ்வர்ணமால்யா.

''ஏன் அதோட நிறுத்திட்டீங்க... அழகு, கலை, இரண்டுமே ஆன்மீகத்தோட தொடர்புடையதுன்னு பிளேட்டோ வரைக்கும் எல்லாரும் சொல்லியாச்சுன்னு உங்களுக்குத் தெரியும் தானே?''

ஸ்வர்ணமால்யா மனத்திற்குள் மெல்ல அவன்பால் கவரப்பட்டாள்.

''என்ன படிச்சிருக்கீங்க சித்தார்த்...?''

''எம்.எஸ்ஸி. மேத்தமடிக்ஸ்... செகண்ட் க்ளாஸ்தான். எக்ஸாம் டயத்திலயும் கண்ட கண்ட புஸ்தகம் படிச்சா, எந்த யுனிவர்சிடில மெடல் தருவாங்க?''

"அப்புறம்?"

''அப்புறம் என்ன... வேலை தேடலாம்னு யோசிச்சப்பதான் உங்கப்பா உன்னைப் பார்க்க அழைச்சுக்கிட்டு வந்துட்டாரு... கல்யாணம் நடந்தா வேலை கியாரண்டி.'' என்றான்.

''உனக்கு ஒரு வேலை கிடைக்க என்னைக் கல்யாணம் பண்ணிக்கப் பாக்கறியா?''




காபிக் கோப்பையுடன் இடையில் வந்த ஸ்வர்ண மால்யாவின் அப்பா "அப்படியில்லம்மா... நமக்கென்ன பணமில்லையா?" என்றார்.

கோபப்படாமல் சிரித்த சித்தார்த், "முதல்ல உங்களுக்கு என்னப் பிடிக்கணுமில்லையா?" என்றான்.

"எக்கச்சக்க புஸ்தகம் படிச்சா என் பொண்ணுக்கு உன்னைப் பிடிக்கும்னு எங்கப்பா 'க்ளூ' கொடுத்தாரா?"

"ச்சே...! என்ற சித்தார்த், "பொண்ணு பாக்கறதுக்காக எக்ஸாம் போற மாதிரி படிச்சுட்டு வரமுடியாதுங்க... என் பழக்கமே அப்படித்தான். புஸ்தகத்துல வாழுற புழு..." என்றான்.

மூவரும் காபி குடித்தார்கள். ஸ்வர்ண மால்யாவின் அப்பா மறுபடியும் விலகினார். அவள் எப்படியாவது திருமணம் செய்து கொள்ள வேண்டுமென்று ஏங்கினார். ஒரே பெண் என்று விருப்பம் போல் விட்டது தப்பாகி விட்டது. ஐ.ஐ.டியில் படித்துவிட்டு அநியாயத்திற்கு மாப்பிள்ளைப் பையன்களை கேள்வி கேட்கிறாள்.

ஸ்வர்ணமால்யாவும், சித்தார்த்தும் மறுபடியும் பேசினார்கள். நிறையப் பேசினார்கள். கொஞ்ச நேரம் கழித்து சித்தார்த் 'பை' சொல்லிப் புறப்பட்டு விட்டான்.

ஸ்வர்ணமால்யா தன் அறைக்கு வந்தாள். அப்பா உறங்கி விட்டிருப்பார். என்னவோ அவளுக்குத் தூக்கம் வரவில்லை. கண்ணாடியில் தன்னை இரண்டு மூன்று முறை பார்த்துக் கொண்டாள். எத்தனை அழகாக இருக்கிறேன். புத்தகமொன்றைப் பார்க்க முயன்று தோற்றாள். சித்தார்த் கடைசியாக என்ன சொன்னான்?

"ஸ்வர்ணமால்யா இந்த வயசுக்கான ஆசைகளை நீங்க வெளிக்காட்டவே மாட்டேங்கறீங்க... ஆச்சர்யம்தான்...

"ஆனா ஆசைகளை அடக்கறதைப் பத்தி திருவள்ளுவர் நீத்தார் பெருமையில் பேசறார்... இந்திரனைக் குறிப்பிட்டு 'சாலும் கரி'ன்னு ஒரு வார்த்தை வருது... 'அஞ்சு மடக்கும் அமரரும் அங்கிலை'ன்னு திருமூலர் உங்களைப் பார்த்திருந்தா சொல்லியிருக்க மாட்டார். ஆனா இந்தக் குறள்ல ஒரு சுவாரசியம்.. கரி அப்படின்னா சாட்சி அப்படின்னுதான் அர்த்தம். இந்தக் குறளுக்கு உரை எழுதின பரிமேலழகர் இலேசா தடுமாறுகிறார்... நம்ம கலைஞர் எழுதின குறளோவியம் வரைக்கும் இந்தத் தடுமாற்றம் இருக்கு... புலன்களை அடக்காத இந்திரனை எப்படி உதாரணமா காட்ட முடியும்? சாட்சியா வச்சாத்தானே எதிர்த்துக் காட்ட முடியும்? நீங்க எந்தத் தமிழ் புலவர்கிட்டயாவது விசாரிச்சு சொல்லுங்க... "ஆனா சொல்ல மறந்துட்டேனே, நீங்க நான் நினைச்சதைவிட அழகா இருக்கீங்க... வரட்டா... பை."

**ஸ்**வர்ணமால்யா எப்போது தூங்கினாள் என்றே தெரியவில்லை. அவளுக்கு காதில் அவன் பேசுவது போல கேட்டுக் கொண்டே இருந்தது. எவ்வளவு புத்திசாலி. கலபமாக என் பெண்மையைத் தொட்டு விட்டுப் போய்விட்டான். ஆனால் சித்தார்த் சொன்னது போலவே அழகு கலையாமல் எழுந்தாள். ஹாலுக்கு வந்தாள். அப்பா பேப்பரைப் படித்துக் கொண்டே பார்க்க, ஸ்வர்ணமால்யா நேரடியாக, "அப்பா.. ஐ வுட் லைக் டு மேரி சித்தார்த்.." என்றாள்.

அப்பாவுக்கு ரொம்ப சந்தோஷமாகி விட்டது. அதீதப் படபடப்பில் பாய்ந்து, அருகிலிருந்த ஃபோனை எடுத்து டயல் செய்தார். மறுமுனை கிடைத்தது.

"குட்மார்னிங் சித்தார்த்... ஒரு குட் நியூஸ்... என் பொண்ணுக்கு உன்னைப் பிடிச்சிருக்கு... உன்னைக் கல்யாணம் பண்ணிக்கறதாச் சொல்றா.."

சித்தார்த், மறுமுனையில், "அங்கிள்... உங்க பொண்ணு ரொம்ப அழகா இருக்காங்க... படு ஸ்மார்ட்... பயங்கர புத்திசாலி... நல்லா அழகா கோபப்படறாங்க... ஆனா, என்னமோ குறையுது அங்கிள்.." என்றான்.

"என்னப்பா சொல்றே?"

"ஆமா அங்கிள்... உங்க பொண்ணுகிட்ட என்னமோ குறையுது... ஸாரி.." என்றான் சித்தார்த். ○

## ஏட்டிக்குப் போட்டி:

# கல்கி நடத்திய கல்லூரிப் பட்டிமன்றம்

**மா**ணவர்களால் மூன்று மணி நேரம் ஒரே இடத்தில் ஆடாமல் அசையாமல் இருக்க முடியுமா...?

இருந்தார்கள், திருச்சி ஸ்ரீமத் ஆண்டவன் கலை மற்றும் அறிவியல் கல்லூரி மாணவர்கள்! வயிறு குலுங்கும் சிரிப்பும், கைத்தட்டல் ஓசையுமாய், சிந்தனையையும் சிரிப்பையும் உள்வாங்கியபடி. அந்தப் பட்டாம் பூச்சிகள் படபடத்தது கண் கொள்ளாக் காட்சி!

கல்கி இதழ் மாதந்தோறும் நடத்தும் ஏட்டிக்குப் போட்டி, கல்லூரிப் பட்டிமன்றம் இந்த மாதம் திருச்சியில்!

பேராசிரியர் கு. ஞானசம்பந்தன் நடுவராகப் பொறுப்பேற்று நடுநாயகமாக வந்தமர்ந்தபோது, மாணவ மாணவிகளின் நீண்ட நேர கரவொலி கல்லூரி வளாகம் எங்கிலும் எதிரொலித்தது.

"நம் நாட்டில் படித்து வெளி நாட்டில் வேலை செய்வது அடிப்படைத் தேவையா? அப்பட்ட துரோகமா?" என்பது பட்டிமன்றத் தலைப்பு. அணிக்கு மூவரென மொத்தம் ஆறு பேர் பங்கேற்பு. ஆவேசம், துடிப்பு, எள்ளல் என பன்முக உணர்வுகளையும் தம்முடைய உரைகளில் கொட்டித் தீர்த்தனர் அவர்கள்.

பட்டிமன்றத்துக்குள் நுழைவோமே.

• கு. ஞானசம்பந்தன்

• ஏ. பாலகிருஷ்ணன்

• சி. விக்னேஷ்

• கு. பாரதி

**அடிப்படைத் தேவையே!**

**ஏ. பாலகிருஷ்ணன்**

● ஒரு தாய்க் குருவி இருக்கிறதே... அது தன் குஞ்சுகளுக்குப் பறக்கும் தொழிலைக் கற்றுக் கொடுக்கிறதே... ஒருநாள் குஞ்சுகள் பெரிதாகிக் கூட்டை விட்டுப் பறந்து போகும். அவற்றைப் பார்த்து தாய்க் குருவி ஒரு போதும் சொல்வதில்லை, நீங்களெல்லாம் 'கூட்டுத் துரோகிகள்' என்று. ஆனால் வேலை தேடி நாங்கள் வெளிநாடு பறந்தால் மட்டும் ஏன் எங்களை 'நாட்

# ஏன் பதிந்தாய் மகனே ஏன் பதிந்தாயோ?

டுத் துரோகிகள்' என்று குற்றம் சுமத்து கிறீர்கள்?

● நாட்டுப் பற்றும் மொழிப் பற்றும் தேவைதான். அது நமக்கு நலம் பயப்பதாக இருக்க வேண்டும். என் குடும்பத்தில் இருக்கும் ஒவ்வொருவரும் வறுமையில் செத்துக் கொண்டிருக்கும்போது, என் மனத்தை யார் அதிகம் பாதிப் பார்கள்? பாரதத் தாயா? இல்லை... என் பட்டினித் தாயா? எங்களுக்குத் தேசாபிமானம் இல்லை யென்று நினைத்து விடாதீர்கள். தேசாபிமானத்தைவிட எங்கள் குடும்பத்தின் மீது நாங்கள் வைத்திருக்கும் பாசாபி மானம் அதிகமாக இருக் கின்றது.

● நம் நாட்டு அறிவியல் அறிஞர் ஒருவர் தம் கண்டுபிடிப்புகளை, ஆதாரபூர்வமாக நிரூபிக்கத் தேவையான அடிப்படை வசதி களைக்கூட, ஒரு காலத்தில் நம் இந்தியாவில் செய்து தர முடியவில்லை. அந்த அறிவியல் அறிஞர் வேறு யாருமல்ல... எங்கள் திருவா னைக்காவல் பகுதியைச் சேர்ந்த சர்.சி.வி. ராமன். அவர் மட்டும் திருவானைக்காவல் பிரகாரத்தையே சுற்றிக் கொண்டிருந்தால், நிச்சயமாக தன்னுடைய 'ராமன் விளைவு களுக்கான' நோபல் பரிசைப் பெற்றிருக்க முடியாது.

**அப்பட்ட துரோகமே!**

**சே. சுப்புலெட்சுமி**

● நம் நாடு பண்பாடு, கலாசாரம், ஆன்மிகம் இவற்றால் பின்னப்பட்ட ஒரு குருவிக் கூடு. இதில் ஏதாவது ஒன்று பிய்ந்து போனாலும் எல்லாமே நைந்து விடும். இவர்கள் எல்லாம் வெளிநாடு சென்று இவை மூன்றையும் காற்றில் பறக்க விட்டு விடுகிறார்கள்.

● அரபு நாடுகளை எடுத்துக் கொள்ளுங்கள். அங்கு விமான

• சே. சுப்புலெட்சுமி

• இரா. கார்த்திகேயன்

• இரா. சரவணன்

நிலையத்திலேயே உங்களிடமிருக்கும் ஆன்மிக சம்பந்தப்பட்ட புத்தகங்களை, படங்களை வாங்கி வைத்துக் கொண்டுதான் அந்நாட்டிற்குள்ளேயே உங்களை விடுவார்கள். அங்கு நீங்கள் சென்று அடிமையாகத்தான் உழைக்க வேண்டும்.

● அதே சமயத்தில் இங்கு ஒரு இஸ்லாமியரும் சந்தோஷமாய் இருக்கலாம். ஒரு கிறிஸ்துவரும் சந்தோஷமாக இருக்கலாம். ஒரு இந்துவும் சந்தோஷமாக இருக்கலாம். அப்பேர்ப்பட்ட சுதந்தர பூமியை விட்டுவிட்டு, வெளிநாடு சென்று அடிமையாகத் தான் உழைப்பேன் என்று அடம் பிடிக்கிறார்கள் நம்மில் சிலர்.

**அடிப்படைத் தேவையே!**

**க. பாரதி**

● திரை கடல் ஓடி திரவியம் தேடு. நாலு இடத்துக்குப் போனாத்தான் நாலு விஷயம் தெரியும். மண்ணுளிப் பாம்பு மாதிரி, திறமை மதிக்கப்படாத இடத்தில் சுற்றிச் சுற்றி வருவதில் ஒரு பிரயோசனமும் இல்லை.

● வானம் தொட்டுவிடும் தூரம்தான். விமானத்தை ரிமோட் கண்ட்ரோலில் வடிவமைத்தார் ஒரு தமிழர். அந்தத் தமிழர் வடிவமைத்தது அபுதாபியில் என்றதால், இன்று அந்த விமானம் விண்ணிலே சீறிப் பறக்கின்றது. இதுவே தமிழ்நாட்டில் நிகழ்ந்திருந்தால் சிறுவர்களின் கைகளில் விளையாட்டுப் பொம்மைகளாய் மாறிப் போயிருக்கும்.

● எங்கள் இளைய தலைமுறையினர் வெண் சாமரம் போன்றவர்கள். அவர்களை ஒட்டடை அடிக்கப் பயன்படுத்தாதீர்கள். நாங்கள் எல்லாம் நெம்புகோல்கள். எங்களைத் தயவு செய்து பல் குத்த உபயோகிக்காதீர்கள். எங்கள் இளைஞர்கள் எல்லாம் அணுகுண்டுகளைப் போல, அவர்களை பொக்ரானில் பயன்படுத்துங்கள். கோயம்புத்தூரில் பயன்படுத்தி விடாதீர்கள்.



**அப்பட்ட துரோகமே!**

**இரா. சரவணன்**

●குழந்தை பிறந்திருக்கும் ஒவ்வொரு வீட்டுக்கும் அரசு அதிகாரிகள் சென்று, 'மூகாமிலே உங்கள் குழந்தைகளைத் தூக்கி வந்து, அவர்களுக்கு போலியோ சொட்டு மருந்து போட்டுக் கொள்ளுங்கள். நோய்களிலிருந்து அவர்களைக் காத்துக் கொள்ளுங்கள்!' என்று அறிவுறுத்தி விட்டுச் செல்கிறார்கள்.

● அதன் பின்னர் பாலர் பள்ளியில், அக்குழந்தைக்குச் சத்துருண்டை, பள்ளிப் படிப்பில் சத்துணவு. கல்லூரிப் படிப்பில் ஸ்காலர்ஷிப், ஆராய்ச்சிப் படிப்பில் ஃபெலோஷிப். எதற்காக அரசாங்கம் இத்தனை சலுகைகளையும் செய்து தருகின்றது? இளைஞர்களாகிய இவர்கள் இன்று படித்துவிட்டு, நாளை நம் நாட்டுக்கு உலக வரைபடத்தில் ஒரு நல்ல இடத்தைப் பிடித்துத் தருவார்கள் என்றுதானே?

● ஆனால், இவர்கள் உண்ட வீட்டுக்கே இரண்டகம் செய்து விடுகிறார்கள். இங்கே படித்துவிட்டு, வெளிநாட்டு வேலைக்குச் செல்வது எப்படித் தெரியுமா இருக்கிறது? தன்னைப் பத்து மாதம் சுமந்து பெற்றெடுத்த தாயை, தனக்கு நடக்கக் கற்றுக் கொடுத்தவுடன் அதே காலால் எட்டி உதைப்பது போலிருக்கிறது. நான் நினைக்கிறேன், பள்ளிக்கூட சத்துணவில் கொஞ்சம் உப்பைப் போட மறந்துட்டாங்கன்னு.

**அடிப்படைத் தேவையே!**

**சி. விக்னேஷ்**

● மாற்றுத் தாவணியற்ற என் தங்கை,

அடுத்த வருடமாவது அடுத்தவன் வீட்டுக்குச் செல்வோமா என ஏங்கும் என் அக்கா, பள்ளிப்படிப்பை பாதியில் விட்ட என் தம்பி, இந்த இன்டர்வியூவிலாவது எனக்கு வேலை கிடைக்குமா என்று வேண்டாத தெய்வங்களை எல்லாம் வேண்டிக் கொண்டிருக்கும் என் பெற்றோர். குடும்பத்தின் அச்சாணியான நான் என்ன செய்வேன்? என்பது வயதானால்கூட வேலைக்கு இங்கு உத்தரவாதமில்லை. அதனால்தான் வெளிநாட்டு வேலை தேடிச் செல்கிறேன்!






● இன்று இங்கு வேலைகள் லஞ்சத்தில் தஞ்சமடைந்து விட்டன. இந்தியாவில் தட்டினால் தங்கம் கிடைக்கின்றது. வெட்டினால் வெள்ளி கிடைக்கின்றது. அடித்தால் அலுமினியம் கிடைக்கின்றது. படித்தால் மட்டும் எங்கே அய்யா வேலை கிடைக்கின்றது?

● பள்ளிப் படிப்புக்குப் பரம்பரைச் சொத்தை விற்றோம். கல்லூரிப் படிப்புக்குக் கழனிகளை விற்றோம். வேலை வாய்ப்பு அலுவலகத்தில் எங்கள் ஆயுள் முழுவதையுமல்லவா கேட்கிறார்கள்!

**அப்பட்ட துரோகமே!**

**இரா. கார்த்திகேயன்**

● இவுங்களை வேலைக்கு வாங்க... வாங்கன்னு வெளிநாடு கூப்பிடுதுன்னு சொல்றாங்களே. அந்தப் படிப்பும் திறமையும் இவுங்களுக்கு எங்கிருந்துங்க கெடைச்சது? இங்கே உள்நாட்டிலதானே கிடைச்சது. யோசிச்சுப் பாருங்க. கூரை ஏறி கோழி பிடிக்க முடியாதவன், வானமேறி வைகுந்தம் போவானா?

● இப்ப நம்ப நாட்டுல நாம சுதந்திரமா இருக்கலாம். வெளிநாட்டுல போயி அப்படி இருக்க முடியுமா? பயந்து பயந்து அந்த பாஸ்போர்ட் காலம் முடியற வரைக்கும்தான் அங்கே இருக்க முடியும். அப்புறம் திரும்பி இங்கதான் வந்தாகணும். நீர டிச்சு நீர் விலகாதுன்னு அவுங்க முதல்ல புரிஞ்சுக்கணும்.

● கேட்டா... இங்க வாய்ப்பு இல்லே..வசதி இல்லேன்னு புலம்புறாங்க. நம்ப நாட்டுலயும் திறமையைப் பயன்படுத்தி வாழ்க்கையில உயர்ந்தவங்க நெறையப் பேரு இருக்காங்க.

● கதிரவன் உதிப்பதற்கு பல மணி நேரம் முன்னே எழுந்து, மணல்குன்றுகளைக் கடந்து சென்று தன் ஞானாசிரியனிடம் பாடம் பயின்று, கதிரொளி மண்ணில் படும் நேரம் செய்தித்தாள் கட்டுச் சுமந்து விற்றுவிட்டு, வீடு வந்து பள்ளிக்குக் கிளம்பிச் செல்ல வேண்டும். மாலையில் வீடு திரும்பியவுடன் இரவு வரை தந்தையுடன் வியாபாரம் செய்தாக வேண்டும். இத்தனை நெருக்கடியிலும் படிப்பையும் கவனித்துக் கொண்டு, காய்ந்து போன ரொட்டித் துண்டுக்கும், ஆறிப் போன பாலுக்கும் மத்தியில் ஆய்வகத்தையே தன் கருவறையாய் மாற்றிக் கொண்டவர். அவருக்காக இந்தியக் குடியரசு நாற்காலி இறங்கி வரவில்லையா? அந்த அரியாசனத்துக்கு சரியாசனம் ஆனவர் அவர். அவர்தான் டாக்டர் அப்துல் கலாம். எல்லோரும் அவரை 'நியூக்ளியர் ஹெட்'

## நிலைப்பாடு

- முதல் முறையாய்ச் சந்திக்கப்
  புறப்படுகிறேன் உன்னை
- இருந்தும்..
  உனது தனிமையை
  கலைப்பதா
  என்ற கவலையோடு
  திரும்பி விடுகிறேன்
  ஒவ்வொரு முறையும்.



எனச் சொல்கிறார்கள். ஆனால் நான் அவர்தான் 'க்னியர் ஹெறட்' எனச் சொல்வேன். அவர் மட்டும் வெளிநாட்டுக்குச் சென்றிருந்தால் நமது அணு விஞ்ஞானம் என்ன வாகிப் போயிருக்கும்? ஒருகணம் சிந்தித்துப் பாருங்கள்.

**பேராசிரியர் கு. ஞானசம்பந்தன்:** *(நடுவர் தீர்ப்பு)*

நம் நாட்டில் படித்து வெளிநாட்டில் வேலை செய்வது அடிப்படைத் தேவையா? அப்பட்ட துரோகமா? என்று இரு அணியினரும் தங்கள் தரப்பு வாதங்களை எடுத்து வைத்துள்ளார்கள்.

தேவையா? துரோகமா? என்பது அதில் சுருக்கமான வார்த்தை. படித்த எல்லோருக்கும் இங்கு வேலை கிடைக்கிறதா எனக் கேட்டார்கள். அதனால் நாங்கள் படும் அவமானம் கொஞ்சமா நஞ்சமா என சுட்டிக் காட்டினார்கள். கீதையில் ஒரு வார்த்தை வரும். 'அர்ஜுனா உன்னை அவமானம் செய்தவர்களை மறந்து விடாதே. மனத்தில் வைத்துக் கொள். காரணம், அடுத்து அவரைக் காண நேரும்போது, வாழ்வில் நீ உயர்ந்து இருக்க வேண்டும்!' என்று. பல அவமானங்களைக் கடந்துதான் நாம் முன்னேற வேண்டியிருக்கிறது.

இங்கு ஓர் ஆண்டு வருமானம் அங்கு ஒரு மாதத்தில் கிடைக்கிறதே. ஐந்து வருடம் அங்கு சென்று வேலை பார்த்தால் போதுமே. அதனால்தான் வெளிநாடு செல்கிறோம் என்றெல்லாம் சொன்னார்கள். மேலும் திறமைக்கு இங்கு மதிப்பில்லை என்றும் வாதங்களை எடுத்து வைத்தார்கள்.

நம்முடைய திறமைக்கு அங்கீகாரம் கிடைக்கவில்லையே, என்று நமக்கு ஒருவித கோபம் உருவாகிறது இயல்புதான். வேலை வாய்ப்பு அலுவலகத்தில் பதிவு செய்யும் வரிசையில் நின்றிருக்கும் தன் மகனைப் பார்த்து அப்பா ஒருவர் பாடுகிறார்: "ஏன் பதிந்தாய் மகனே... ஏன் பதிந்தாயோ... நான் பதிந்த காரணத்தை நானே அறியு முன்னே... இங்கு வந்து ஏன் பதிந்தாய் செல்வ மகனே!" என்று!

பாரதி சொல்வானே 'நல்லதோர் வீணை செய்தே' எனும் கவிதையில், எனை சுடர்மிகு அறிவுடன் படைத்துவிட்டாய் என்று... அந்த சுடர்மிகு அறிவினைத் தூண்டி விடுவதே இந்தப் பட்டிமன்றத்தின் நோக்கமாகும்.

மொழி குறித்து கூடப் பேசினார்கள். அமெரிக்காவின் பில் கிளின்டன் இந்தியாவுக்கு வந்தபோது, நிறையப் பேர் அவருடன் நின்று புகைப்படம் எடுத்துக் கொண்டார்கள். ஆனால் அந்த பில் கிளின்டன் தமிழ் வழிக் கல்வி பயின்ற அப்துல் கலாம் என்கிற மனிதருடன் சேர்ந்து புகைப்படம் எடுத்துக் கொள்ளவே விரும்பினார் என்பது குறிப்பிடத்தக்கது.

உலகத்தை முதன் முதலில் விண்வோடத்தில் சுற்றிவந்த யூரிகாகரினை சந்தித்தபோது, அப்போது பிரதமராக இருந்த நேரு ஒரு கேள்வி கேட்டார். "உலகு முழுவதும் நீங்கள் சுற்றி வந்து பார்த்தபோது வானிலிருந்து பார்க்கையில் எங்கள் இந்தியா எப்படி இருந்தது?" என்று. அதற்கு அவர் 'வளைந்து நெளிந்து ஓடுகின்ற ஜீவ நதிகள் யாவும் ரத்த நாளங்கள் போலவும், இமயமலை இதயம் போலவும், உலகம் என்கிற உடலுக்கு உங்கள் இந்தியா உயிர் போலவும் என் கண்களுக்குத் தெரிந்தது!" எனச் சொன்னாராம்.

அதுபோல, உங்கள் உணர்வுகள் இந்த தேசத்தின் மீது இருக்கட்டும். உங்கள் உழைப்பை இங்கு தாருங்கள். வெளிநாட்டுக்கு வேலை தேடிச் செல்வது என்பது காலத்தின் கட்டாயம் எனச் சொல்லப்பட்டாலும், அது ஒரு வகையில் துரோகமே எனக் கூறி, பட்டிமன்றத்தை நிறைவு செய்கிறேன்.

தொகுப்பு: **ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு**
படங்கள்: **தாருஸ் இளங்கோவன்**

# நடக்குமென்பார்;

அக்னிசர்மா பக்கம்

**மேஷம்** : சாதாரணமாகவே, நல்ல உழைக்கக் கூடிய 'டைப்பு'தான் நீங்க. கூடவே கிரக சஞ்சாரமும் அனுகூலமா ஒத்துழைக்கிறதனாலே, எடுத்த காரியங்களில் வெற்றி அடைஞ்சுட்டுதான் மறுவேலை பார்ப்பீங்க. உத்தியோகத்தில் அனுகூலமான திருப்பம் ஏற்படும். பதவி உயர்வு, ஊதிய மேன்மை ஏற்படும். சக ஊழியர்களின் ஒற்றுமை, ஒத்துழைப்பு போன்றவற்றால் சிக்கலான காரியங்களையும் சிறப்பாகச் செய்து முடிப்பீர்கள். சுய தொழில் முன்னேற்றம் தரும். மாணவர்கள் உழைப்புக்கேற்ற பலன் பெறுவார்கள். மக்கள் நலம் சீராக இருக்கும். தாய் அல்லது தாய் வழி மூலம் அனுகூலம் உண்டாகலாம்.

**ரிஷபம்** : மனக் குழப்பம்னு ஒத்த வரியிலே முடிச்சுடலாம்னாலும், அனுபவிச்சவர் நீங்கதானே. எவ்வளவு உளைச்சல் எத்தனை சஞ்சலம். அதிலிருந்து ராசிநாதன் சுக்ரன் உங்களுக்கு விடுதலை தந்து, உதவப் போறார். எட்டாம் இடத்தில் இருந்து, அந்த வீட்டின் அதிபதியான குரு கடகத்தில் சஞ்சாரம் என்பதால் கூடுதல் அதிர்ஷ்டம் வேறு கொசுறாகக் கிடைத்துள்ளது. பீக் அவர் பஸ்ஸில் தொற்றிக் கொள்ளும் கல்லூரி மாணவர்களைப் போல, உற்சாகமும் துணிச்சலும் தொற்றிக் கொள்ள காரியங்களைச் செய்து முடிப்பீர்கள். பெண்களுக்கு அபிலாஷைகள் நிறைவேறும். திருத்தணி முருகனை மனத்தில் இருத்தி, பிரார்த்திக்கவும். வேலும் மயிலும் துணை.

**மிதுனம்** : புதிய வீடு, மனை, நிலம், வாகனம்னு வாங்க பிரமாதமான திட்டமெல்லாம் போட்டு வைச்சிருந்தீங்க இல்லையா? இந்த வாரம் ரொம்ப தோதா இருக்கும். சட்டுபுட்டுனு வாங்கி ஆசையை நிறைவேத்திக்கோங்க. குரு பலம் நிறைந்திருப்பதால், குடும்பத்தில், குதூகலம் பூரணமாக இருக்கும். திருமணம், மகப்பேறு போன்ற சுபகாரியங்கள் நடக்கும். வழக்கு, விவகாரங்களில் அனுகூலமான திருப்பம் ஏற்படும். மக்கள் நலன் சீராக இருக்கும். புதிய ஒப்பந்தங்கள் வந்து சேரும். கலைத் துறையினருக்குப் புகழ், பாராட்டு கூடும்.

**கடகம்** : "ஓட்டைக் காலணாவுக்கு வழியில்லை." என்று புலம்பிக் கொண்டிருந்தீர்கள் இல்லையா? இனிமேல் அந்தச் சோகப்பாட்டு பாட வேண்டிய அவசியமிருக்காது. கட்டுக்கட்டாக கரன்ஸி வசதி அதிகரிக்கும். கூட்டுத் தொழில் புரிபவர்களுக்கு, அமோக பலன் உண்டாகும். இயந்திர வகை, இன்டஸ்ட்ரிஸ், எலக்ட்ரிகல்ஸ், கம்ப்யூட்டர் தோல், பர்னிச்சர் சம்பந்தமான பொருட்கள் ஆதாயம் கொண்டு வரும். கொடுக்கல் வாங்கலின்போது கவனம் தேவை. யாரையும் நம்பி உத்திரவாதக் கையெழுத்துப் போட வேண்டாம். சிக்கலில் கொண்டு போய் விடலாம். உஷார்.

**சிம்மம்** : 'பழைய கடன் தொல்லைகள் யாவும் மறையும்,' என்று ஒரு வரி சொன்னாலே, செம குஷியாகிவிடுவீர்கள். மேலும் தொழில் அபிவிருத்தி, செல்வாக்கு ஏற்றம், காரிய சித்தி, தெய்வபலம் என்று அடுக்கிக் கொண்டே போனால், பத்து பாட்டில் க்ளுகோஸ் ஏற்றியது போல சுறுசுறுப்புடன் இளவட்ட நடை போட மாட்டீர்களா என்ன? குடும்ப தன லாபாதிபதியான புதன் 7ல் அமர்ந்து குரு பார்வை பெற்றுள்ளதால் சரளமான பண வசதி இருக்கும். அரசுப் பணியாளர்கள் முன்னேற்றம் அடைவார்கள். குல தெய்வப் பிரார்த்தனை, புனித யாத்திரை போக இது நல்ல நேரம்.

**கன்னி** : "இந்தச் சூரியன் இப்படிக் கொளுத்துதே" என்று தெரியாத்தனமாய் எரிச்சல்பட்டு விடாதீர்கள். 6ல் இருக்கும் அந்தச் சூரியனாரின் சஞ்சாரத்தினால்தான், உங்களைப் பயமுறுத்திக் கொண்டிருந்த அரசாங்க விவகாரம், சுமூகமாய் முடியப் போகிறது. வெளிநாட்டுச் செய்திகள் சுபமானத் தகவல் தரும். சட்டம், இராணுவம், காவல் ஆகிய துறைகளைச் சேர்ந்தவர்கள் முன்னணிக்கு உயர்வார்கள். பொன், வெள்ளி, ஆபரணம், நவரத்தின இனங்கள் எதிர்பாராத லாபத்தைத் தரும். இழுபறியாகக் கிடந்த பூர்வீக சொத்து விவகாரம் அனுகூலமாகும். சிறு சிறு உடல் உபாதை ஏற்படலாம். கவனம் தேவை.



இசையமைப்பாளர்
தினாவின் மனைவி
ஹேமமாலினிக்கு (மேஷம்)
எடுத்த காரியத்தில்
வெற்றி உண்டாம்.

பிப்ரவரி 12 முதல் 18 வரை

**துலாம்** : சதாம் போல கணவனும், புஷ் போல மனைவியும் மாற்றி மாற்றி 'புர்...புர்' என்று முறைத்துக் கொள்வதால், குடும்பஸ்தானம் படு மட்டம் என்று ஜாதக ரிப்போட் சொல்கிறது. ஆனால் இந்த வாரம் கணவன் - மனைவி உறவு நிலை மெகா சீரியலும் விளம்பரதாரரும் போல சுமூகமாக இருக்கும். 2ம் இடமான குடும்பஸ்தானத்தை குரு பார்ப்பது சிறப்பாகும். இதனால் சுப காரிய முயற்சிகள் கூட அனுகூலம் பெறும். பெண்கள் நினைத்தது நடக்கும். கேட்பது கிடைக்கும். மக்கள் நலம் சீராக இருந்து மகிழ்விக்கும்.

**விருச்சிகம்** : 'எடுத்தேன்.. கவிழ்த்தேன்' டைப் ஆசாமியான நீங்கள் இந்த வாரம் கொஞ்சம் ஜாக்கிரதையாகவே இருப்பது நல்லது. உங்கள் ராசியில் கேதுவும் 7ம் இடத்தில் ராகு, சனி சஞ்சாரம் என்பதால் அவ்வப்போது சிறு சிறு பிரச்னைகள் ஏற்பட்டு, குரு பார்வை காரணமாக உடனுக்குடன் நிவர்த்தியாகும். அலுவலகத்தில் எல்லோருடைய ஒத்துழைப்பும் கிடைக்க, இடமாற்றம், பதவி உயர்வு, புதிய பொறுப்பு என நல்ல பலன்கள் மனத்துக்கு நிறைவு தரும். பெண்களுக்கு இது அதிர்ஷ்டமான வாரம். சாதுக்கள், மகான்கள் தரிசனம் செய்வது மன அமைதி தந்து வழிகாட்டும்.

**தனுசு** : 'அடப்போப்பா... உப்பு விக்கப் போனா மழை பெய்யுது.. மாவு விக்கப்போனா காத்தடிக்குது' என்று நொந்து போய் கிடந்தீர்கள் அல்லவா! உப்பையும் மாவையும் சேர்த்து மசால் வடையா விற்று, காசு பார்க்கப் போறீங்க. அதுக்கான துணிவும் தன்னம்பிக்கையும் கூடும் காலம் வந்தாச்சு. குறிப்பா, வியாபாரிகள், கூட்டுத் தொழில் செய்பவர்களுக்கு வளமான எதிர்காலம் உண்டு. அரசுப் பணியாளர்கள் முன்னேற்றம் காண்பார்கள். நண்பர்கள், உறவினர்கள் குறிப்பறிந்து உதவ முன் வருவார்கள். ஸ்பெகுலேஷன் துறையில் நிதானம் தேவை.

**மகரம்** : மகர ராசி பெண்களே... நீங்கள் தகர டப்பா தொட்டாலும், பசும்பொன்னாக மாறும் பாக்கியசாலிகளாவீர்கள். ராசிநாதன் சனி 5ல் அமர்ந்து ராகுவுடன் கூடி சஞ்சாரம் என்பதால், எதிர்பாராத வகையில் சில அனுகூலமான திருப்பங்கள் உண்டாகும். உடல் நலம் சீராக இருக்கும். உண்டியல் குலுக்கியதும், காணாமல் போகும் அரசியல் கூட்ட அலேக் தொண்டர்கள் மாதிரி, உங்கள் எதிரிகளும் திடீரென்று காணாமல் போவார்கள். சுய தொழில், வியாபாரம், சிறப்பு காணும். பழைய கடன் தொல்லைகள் விலகி மன அமைதி கூடும்.

**கும்பம்** : பிரிந்து இருப்பவர்கள் ஒன்று சேரும் சூழ்நிலை ஏற்பட்டால் குடும்பஸ்தானத்தைப் பார்க்கும் குருவுக்கு நன்றி சொல்லுங்க. அதே குருவின் அருள் கடாட்சப் பார்வையால், தடைகள் உடைந்து, திருமணம் போன்ற சுபகாரியங்கள் நடக்க வாய்ப்புகள் கனிந்து வரும். வாகனம், டிராவெல்ஸ், புத்தகம், பத்திரிகை ஆகிய இனங்கள் ஆதாயம் கொண்டு வரும். ஏற்றுமதி - இறக்குதி எதிர்பாராத நன்மை தரும். பெண்களுக்கு எல்லா விதத்திலும் அதிர்ஷ்டமான யோக பலன்கள் உண்டாகும். உத்தியோகத்தில் 10ம் இடத்தில் ஆட்சியாக செவ்வாய் என்பதால் சகல விதத்திலும் அனுகூலமான திருப்பம் உண்டாகும். பேச்சில் பதற்றம் கூடாது. எந்தக் காரியத்தையும் தெளிவான மனநிலையுடன் அணுகவும்.

**மீனம்** : உங்கள் ராசிநாதனாகிய குரு பகவான்ஜி, 5ல் பூர்வ புண்ணியஸ்தானத்தில் உச்சம் பெற்று வக்கிர கதியில் சஞ்சாரம் என்பதால், இரண்டு குடம் குடிநீர் கிடைப்பது, மீன்பாடி வண்டியில் அடிபடாமல் இருப்பது, குழந்தைக்கு எல்.கே.ஜி. அட்மிஷன் என அதிர்ஷ்டமான பலன்களே நடக்கும். உத்தியோகத்திலும் எடுத்த காரியங்களில் அனுகூலமே! பூர்வீக சொத்து விவகாரம் சமாதானமான முறையில் பைசல் ஆகும். வெளிநாட்டுத் தொடர்புள்ள விவகாரங்களில் செம லக் அடிக்கும்.



# நடக்கும்!

# குறையொன்றுமில்லை

# 28

திருமழிசை ஆழ்வார் கணக்கை முடித்து விடாமல் தொடர்கிறார். அடுத்த அடியைப் பாருங்கள்.

*ஆறும் ஆறும் ஆறுமாய், ஓர் ஐந்தும்*
*ஐந்தும் ஐந்துமாய்,*
*ஏறுசீர் இரண்டும் மூன்றும் ஏழும் ஆறும்*
*எட்டுமாய்.*
*வேறு வேறு ஞானம் ஆகி மெய்யினோடு*
*பொய்யுமாய்*
*ஊறொடு ஓசையாய ஐந்தும் ஆய ஆய மாயனே!*

நன்றாகக் கவனிக்க வேண்டும். இதிலே முதல் ஆறுக்கு ஓர் அர்த்தம், இரண்டாவது ஆறுக்கு வேறு அர்த்தம், மூன்றாவது ஆறுக்கு மூன்றாவதாக ஓர் அர்த்தம் - மூன்றாகவும் நீயே இருக்கிறாய் என்றார்!

முதல் ஆறு என்ன...?

இதற்குப் பெரியவாச்சான் பிள்ளை வியாக்யானம் பண்ணுகிறார். அந்த ஆழ்வாருடைய திருவுள்ளத்தை நமக்குக் காட்டுகிறார். அப்படிக் காட்டவில்லையானால் நமக்குப் புரியாது.

ஆறு என்ன...?

அத்யாபனம்
அத்யயனம்
யஜனம்
யாஜனம்
தானம்
பிரதிக்ரஹம்

வால்மீகி வர்ணிக்கிறார். அயோத்யா நகரத்திலே, பிரும்ம வித்துக்கள் ஆறு கர்மாக்களை விடாமல் பண்ணிக் கொண்டிருக்கிறார்களாம். அதிலே பற்றுடையவர்களாகச் செவ்வனே அதை நடத்துகிறார்களாம்.

இந்த ஆறு கர்மாக்களைப் பண்ணாமல் விட்டு விட்டால் உலகமே அழிந்துவிடும்.

அத்யயனம் என்பது வேத அத்யயனம். பிரும்ம வித்துக்கள் இதைத் தவறாமல் பண்ண வேண்டும். அது அவர்களுடைய கடமை. அக்ஷரக் கூட்டங்களைச் (ஒலி அமைப்புகளை) சரியாக கிரஹித்தல் வேண்டும். சப்தங்களைச் சுலபத்தில் சம்பாதிக்க முடியாது. மிகுந்த சிரமப்பட வேண்டும். சில சப்தங்களை நாபியிலிருந்து உச்சரிக்க வேண்டும். வேறு சில சப்தங்களுக்கு வாய் அல்லது தொண்டைதான் ஸ்தானம்...

'மத்தினா' என்று ஒரு ஊர் ... அங்கே கனபாடிகள் அத்யயனம் பண்ணுவதற்காக வேதங்களை மனப்பாடம் பண்ணுகிற காட்சி தனியானது. கூடை நிறைய புளியங்கொட்டை வைத்துக் கொண்டு, ஒரு வாக்யம் சொல்லிவிட்டு ஒரு புளியங்கொட்டையைக் கீழே எடுத்துப் போடுவார்கள்! கூடையிலே இருக்கிற புளியங்கொட்டை ஆகிற வரைக்கும் ஒரே வரிதான்... பிறகு கீழே இருக்கிற கொட்டையை எடுத்துத் திரும்பவும் கூடையிலே போடணும். அவ்வளவு பயிற்சி! இப்படியே 2198 பஞ்சாதியும் கனம் சொல்ல வேண்டும்.

கனம் சொல்வது என்பது சாஹித்யத்தை வெறுமனே சொல்வது அல்ல. ஸ்வரத்திலே வித்தியாசம் வந்துவிடக் கூடாது. பதத்திலே வித்தியாசம்

**முக்கூர் லக்ஷ்மிநரசிம்மாச்சார்யார்**

வந்துவிடக் கூடாது. இதற்காகத்தான் புளியங்கொட்டையை வைத்துக் கொண்டு நெட்டுரு பண்ணுவார்கள்.

குண்டூரில் ஒரு சபை இருக்கிறது. சூராத்யாய சபை என்று அதற்குப் பெயர்.

அந்த சபையிலே, கையில் கத்தி வைத்துக் கொண்டுதான் பரீட்சைக்குப் போவார்கள். தப்பாகச் சொன்னால் அதாலேயே அங்கேயே குத்திக் கொள்வார்களாம்!

இதுவரைக்கும் யாரும் குத்திக் கொள்ளவில்லை! தப்பாகச் சொன்னால்தானே குத்திக் கொள்வது! ஆகையினாலே இவர்களுக்குக் கத்தியே வேண்டியதில்லை.

வேதத்யயனம் எப்போது நிலைத்து நிற்கும் என்றால், அனவரதமும் சொல்லிக் கொண்டேயிருந்தால்தான் நிலைக்கும்.

பரீட்சைக்குப் போனார் ஒருத்தர். எதிரே எல்லோரும் உட்கார்ந்திருந்தார்கள். அவருக்குக் கற்றுத் தந்தவரும் இருந்தார். திடீரென்று இவருக்குச் சந்தேகம் வந்துவிட்டது... வ்ருஷபம் என்று சொல்ல வேண்டுமா அல்லது ருஷபம் என்று உச்சரிக்க வேண்டுமா... அந்த இடம் வந்தபோது 'ரு'வாகவும். இல்லாமல் 'வ்ரு' வாகவும் இல்லாமல் இரண்டுங்கெட்டானாக உச்சரித்து வைத்தார். கேட்பவர் எப்படி வேண்டுமானாலும் வைத்துக் கொள்ளட்டுமே என்கிற எண்ணம் அவருக்கு!

பரீட்சாதிகாரி சாமான்யப்பட்டவர் அல்ல...

"திரும்பவும் சொல்லு" என்றார்.

அவர் அப்படியே மாற்றாமல் சொன்னார். தூரத்திலிருந்து எழுந்து வந்து விட்டார் பரீட்சாதிகாரி. வந்து, வித்யார்த்தியின் இரண்டு கைகளையும் கெட்டியாகப் பிடித்துக் கொண்டு விட்டார். "இப்போது சொல்லு..." என்றார் முகத்தைப் பார்த்து.

இவர் 'வ்ரு' என்று சரியாக உச்சரிக்கவும், சரியாகத்தானே சொல்கிறீர். அப்புறம் எதற்குச் சந்தேகம்?' என்று சமாதானப் படுத்தினார்.

ஆகவே, வேதத்திலே அக்ஷரத்தை மாற்றக் கூடாது. மாற்றுவதற்கு நமக்கு அதிகாரம் கிடையாது.

சூர்ய : என்கிற இடத்திலே போய் 'பானு!' என்று நாம் சொல்லை மாற்றிப் போடலாமா...! மித்ர : என்று போடலாமா! வேதத்தில் என்ன இருக்கிறதோ அதைத்தான் சொல்ல வேண்டும்.

சூர்ய என்றாலும், பானு என்றாலும்,

''அந்த டாக்டருக்கு பந்தா அதிகம்'னு எப்படிச் சொல்றீங்க?''

''டோக்கன் நம்பரை ஐநூறுல ஆரம்பிக்கிறாரே!''

— எஸ். முகம்மது யூசுப்

மார்த்தாண்ட என்றாலும் திவாகர என்றாலும் ஒரே அர்த்தம்தானே... என்று தடாலென பதத்தை நாம் மாற்றி விட முடியாது.

அருணத்திலே வருகிற வாக்கியம் பாருங்கள் :

*அக்னிர்வா அபாம் ஆயதனம்*

*வாயுர்வா அபாம் ஆயதனம்*

- இங்கே அக்னியை அப்படியே சொல்லியிருக்கிறது. வாயுவையும் அப்படியே சொல்லியிருக்கிறது. ஆனால் சூர்யனை அப்படிச் சொல்லவில்லை - 'சூர்யோவா அபாம் ஆயதனம்' என்று சொல்லவில்லை! 'அசௌவைதபன்னபானாயதனம்' என்று சொல்கிறது.

அசௌவை - அதோ பாருங்கள்' என்று காட்டியது நமக்கு. 'அதோ மேலே தகிக்கிறானே - அவன் கிரணங்கள் வந்து இங்கே விழுகிறதே... அவனுடைய இருப்பிடம்...' என்று குறிப்பாக உணர்த்துகிறது. இதை நாம் மாற்றி, சூர்யோவா அபா என்று சொன்னால் நன்றாயிருக்குமா..? எடுபடுமா? அது தவறாகி விடும். 'அசௌவைதபன்னபானாயதனம்' என்றுதான் சொல்ல வேண்டும்.

ஆகையினாலே வேதத்தை மாற்றக் கூடாது. த்வனி என்ன, உச்சரிப்பு ஸ்தானம் எது? மாத்ரா காலம் எவ்வளவு? எல்லாம் தெரிந்து உச்சரிக்க வேண்டும்.

ஆகவே, அத்யயனம் என்பது சிரமப்பட்டு சம்பாதிக்கப்பட வேண்டியது.

அதேபோல், வந்து கேட்போருக்கும் நன்கு சொல்லிக் கொடுக்க வேண்டும். அத்யாபனம் செய்விக்க வேண்டும். இந்த அத்யாபனத்தைத்தான் முதலில் சொன்னது சாஸ்திரம். ஏனென்றால், கற்றுக் கொடுப்பது



அவ்வளவு முக்கியம். நல்ல முறையிலே கற்றுக் கொடுக்க வேண்டும்.

அதே போல் யஜனம், யாஜனம் - வேட்டல், வேட்பித்தல் என்று இதைத் தமிழில் சொல்லியிருக்கிறது.

வேட்டல் – யஜனம் என்றால் யக்ஞம் செய்வது. வேட்பித்தல் – யாஜனம் என்பது யக்ஞம் செய்து வைப்பது.

தானம் – பிறருக்கு நிறையக் கொடுக்க வேண்டும். பிரதிக்ரஹம் – பிறரிடமிருந்து பெற்றுக் கொள்ளவும் வேண்டும்.

தானம் நிறையப் பெறுபவன் உயர்ந்தவன் என்கிறார் ஆபஸ்தம்பர். இது எவ்வாறு என்று கேள்வி எழும்..? இதராளுக்கு நல்லது ஏற்பட வேண்டும் என்றுதானே இவன் தானம் பெறுகிறான்! ஒருத்தருக்கு ஏதோ தோஷம் அல்லது சங்கடம் என்று வருகிற போது, தானங்கள் கொடுக்க வேண்டும் என்கிறது சாஸ்திரம். அவ்வாறு கொடுக்கிற போது என்னாகிறது...? தானத்தைப் பெறுகிறவன் அந்த தோஷத்தையும் பெறுகிறான். அப்படியானால் பெறுகிறவன் கதி என்ன ஆவது! அவன் உடனே காயத்ரியை ஜபிக்க வேண்டும். அந்த மந்திர பலம் அவனைக் காப்பாற்றும். அவ்வாறு காயத்ரியை ஜபித்து பலம் பெற்றவனுக்கே தானம் கொடுக்க வேண்டும். பெறுபவனும் திரும்பவும் அந்த காயத்ரியை ஜபித்துப் புதுப்பித்துக் கொள்ள வேண்டும்.

இந்த பலத்தில்தான் விச்வாமித்ரர் திரிசங்குவுக்குத் தனியே ஒரு இந்திர லோகத்தை சிருஷ்டிக்க முடிந்தது.

'இந்த சரீரத்தோடேயே மேல் லோகம் போக வேண்டும்' என்றான் திரிசங்கு. அதெல்லாம் போக முடியாது என்றார் வசிஷ்டர். வசிஷ்டர் முடியாது என்றதும் விச்வாமித்ரரிடம் வந்தான் திரிசங்கு. விச்வாமித்ரரும் 'அப்படியெல்லாம் போகக் கூடாது; அது இயற்கைக்குப் புறம்பு என்று சொன்னார்.

"உங்களிடம் வந்தால் தப்பாமல் அனுப்பி வைப்பீர்கள் என்றல்லவா வந்தேன். நீங்களும் வசிஷ்டர் சொன்ன மாதிரியே சொல்கிறீர்களே!" என்றான்.

விச்வாமித்ரருக்கோ வசிஷ்டரைக் கண்டால் பிடிக்காது. அவரை மிஞ்சுவதற்காகவே திரிசங்குவிடம் வாக்குக் கொடுத்து விட்டார் "நான் அனுப்பி வைக்கிறேன்" என்று சொல்லிவிட்டு, தன் சக்தியைப் பிரயோகித்தார்.

திரிசங்கு போய்க் கொண்டேயிருக்கிறான், இந்திர லோகம் வரை போய்விட்டான். இந்திரன் முன் போய் நின்றான். இந்திரன் அவனை எட்டி உதைத்தான்! அங்கேயிருந்து விழுந்தான் திரிசங்கு. மேலே தலை, கீழே கால்... இப்படிச் சுற்றிச் சுற்றி விழுந்து கொண்டேயிருக்கிறபோது, விச்வாமித்ரர் கீழேயிருந்து பார்த்து "அங்கேயே நில்" என்று சொல்லி விட்டார். மேலே கால், கீழே தலை இருக்கிறது அவனுக்கு! அப்படி அவன் நின்ற இடத்திலேயே, இந்திர லோகத்தை உண்டாக்குகிறேன் என்று உண்டாக்கி விட்டார் விச்வாமித்ரர்.

எப்படி அவரால் முடிந்தது என்று கேட்டால், அதுதான் காயத்ரியின் பலம். காயத்ரியினுடைய பெருமை காயத்ரிதான். ஆகாசத்துக்கு உவமை ஆகாசம்தான். சமுத்திரத்துக்கு உவமை சமுத்திரம்தான். இன்னொன்று அது மாதிரி இருக்கிறது என்று சொல்ல முடியுமா!

ராம – ராவண யுத்தம் எப்படி நடந்தது என்று கேட்டால், அதற்கு உவமையாக ராம-ராவண யுத்தத்தைத்தான் சொல்ல முடியும்!

காயத்ரியுடைய பெருமையை எப்படி விளக்குவது என்று கேட்டால், காயத்ரி என்று தான் சொல்ல முடியும்!

அந்த காயத்ரி புத்தியைக் கொடுக்கிறது; புஷ்டியைக் கொடுக்கிறது; தேஜஸைக் கொடுக்கிறது; பிரும்ம தேஜஸை உண்டு பண்ணுகிறது. அத்யாபனம், அத்யயனம், யஜனம், யாஜனம், தானம், பிரதிக்ரஹம் – இவை யாவும் காயத்ரியாகிற தனத்தினாலே வாய்க்கின்றன.

(வளரும்)



அரங்கேற்றம், பதம், வர்ணம், அபிநயம், தில்லானா, ராகம், லயம், ஸ்வரம். இந்தப் பெயர்களில் சென்னை தி.நகரில் உள்ள ஸ்ரீ ஜுவல்லரி புதுப்புது நகைகளை அறிமுகப்படுத்தியிருக்கிறது. நகைகளை சென்னை நகர மாடல் யுவதிகளுக்கு அணிவித்து, பூனை நடை நடக்க விட்டார்கள். இந்த பேஷன் ஷோவுக்குப் பெண்கள் சங்க உறுப்பினர்கள், கஸ்டமர்கள் என்று பலரையும் அழைக்க, "மொத்தத்தில் பலன் 'பிரமாதம்!' " என்கிறார் ஸ்ரீ ஜுவல்லரியின் அசோக் ஜெயின்.

"தங்கம் விலை பாட்டுக்குக் கிடுகிடுவென்று ஏறிக்கொண்டே போகிறது! நகை வியாரம் கொஞ்சம் டல் தானே?" என்று கேட்டால், "உலக அளவில் இதுவரை தோண்டி எடுக்கப்பட்டுள்ள சுமார் 80 ஆயிரம் டன் தங்கத்தில், பதினைந்தாயிரம் டன் வரை இந்திய மக்களிடம்தான் இருக்கிறது. இந்தியர்களின் தங்கக் காதலைத் தடுத்து நிறுத்தும் சக்தி, எதற்கும் கிடையாது" என்கிறார் ஜெயின்.

**மானஸா**

படங்கள் : **யோகா**

# அவளுக்கும் புதிரென்று பெயர்

எனக்கு வந்த கடிதத்தைப் பிரித்து படிக்கத் தொடங்கினேன். ''நான்தான் உங்களுக்குக் கடிதம் போடவில்லையே...? யார்கிட்டயிருந்து...?'' நக்கலும்... கேள்வியுமாய் சபிதா என் அருகில் வந்தாள்.

''எனக்கு ஒரு கடிதம் எழுத மாட்டிங்களா...?'' சாதாரணமாகக் கேட்டாள். ஓர் இளம் பெண், ஆணிடமிருந்து கடிதம் கேட்பது சாதாரணமாக எப்படி முடிகிறது? இவளை ஏமாற்றக் கூடாது...

சபிதா, என் அலுவலகத்திற்கு வந்து ஒரு மாதமே ஆகிறது...! அழகி என்று சொல்ல முடியாது. சராசரியான தோற்றம் மனசை உறுத்தாத உடை...! என் மீது அளவு கடந்த அன்பும் மரியாதையும் வைத்திருக்கிறாள். ஆரம்பத்தில் நான் இதைச் சாதாரணமாக எடுத்துக் கொண்டேன்; மற்ற லேடி ஸ்டாப் மாதிரிதான் நம்மிடம் பழகுகிறாள் என்று...! ஆனால் அவள் அப்படி நினைக்கவில்லை...!

அவளின் வெளிப்படையான பேச்சும், பாகுபாடின்றி பழகும் போக்கும் எனக்குப் பிடித்துப் போனது.

நான் இதுவரை எந்தப் பெண்ணுக்கும் பர்சனல் கடிதம் எழுதியதில்லை. பதில் கடிதம் எழுதுவது கூட எனக்கு விருப்பமான ஒன்றல்ல...! படு சோம்பேறி.

பியூன் கொண்டு வந்து வைத்து விட்டுப் போன அந்தக் கவரைப் பிரித்தாள்.

என் அன்புத் 'தாமிரா'வுக்கு...

இதுநான் உனக்கு வைக்கும் பெயர். அடுத்த ஐந்து நிமிடத்தில் சந்தித்துக் கொள்ளும் தூரத்தில் இருவரும் இருந்து கொண்டு, கடிதப் பரிமாறல் என்பது கேட்பவர்களை வியப்பிலாழ்த்தலாம். நமக்கு மகிழ்ச்சியானது...! ஏற்கெனவே முடிவானது. நான் உன்னை ஒருமையில் விளிக்கலாம் தானே...? எனக்கு வந்த கடிதத்தைப் படித்த போது, ''எனக்கு...?'' என ஒரு சிறுமியின் ஏக்கத்தோடு கேட்டால்... என்ன எழுதுவது...? இப்போது யோசிக்கிறேன்.



சிலரின் பேச்சும்... நடையும்... உடையும்... நமக்குப் பிடித்துப் போகும். ஏதோ ஓர் ஈர்ப்பு... ஒற்றுமை... நம்மை இணைக்கிறது...!

அதுதான் உன்னைக் கேட்கவும்... என்னை எழுதவும் தூண்டியிருக்கும்...! நமது சிந்தனைகள் ஒரே அலை வரிசையில் இயங்கிக் கொண்டிருக்கிறது...!

ஒருநாள் பத்தி புகை பிடிக்காது என்றேன். ''ஏன் சுத்திப் பேசுகிறீர்கள்?'' என எதுகை மோனையோடு கண்டித்தாய். அதற்குப் பின் உன்னிடம் பேசும்போது வால்யூமைக் குறைத்துக்கொண்டேன். ''வாய்க்குள் முனகாதீர்கள் என்றாய்... இந்த முரண்பட்ட உன்னைத்தான் மெல்லிய புன்னகையோடு அங்கீகரிக்கிறேன். எனக்குத் தெரிந்த மொழியில் நீ என்னை உணர வைப்பதும்...உனக்குத் தெரிந்த பாஷையில் நான் உன்னிடம் சிலாகிக்க முற்படுவதும்... தினமும் நடக்கிறது... இந்தப் பெயர் பிடித்திருக்கிறதா...?

என்றும் அன்புடன்
சித்தார்த்

இருவரும் அடிக்கடிப் பேசுவது ஒரு நட்போடும்...தோழமையோடும்தான்...! ஆனாலும் கிசுகிசுப்பும், சலசலப்பும் மற்றவர்கள் மத்தியில் பரவுவதைத் தடுக்க முடியவில்லை.

இதுபோன்ற கிசுகிசுப்புகளும் சல, சலப்புகளும் தவிர்க்க முடியாதவை...!

சக பெண் ஊழியர்கள் 'தாமிரா'வைத் தீண்ட தகாதவளாகப் பார்த்தார்கள். தலையைக் கண்டதும் பேச்சை நிறுத்துவதும்...! பின் கமெண்ட் அடிப்பதும்...! எதிரியாகிப் போனார்கள். ஒருநாள் ஏற்பட்ட உரசலில் அழுது முகம் வீங்கிப் போயிருந்தாள் என் இனிய 'தாமிரா...' எனது அடுத்த ஆறுதல் கடிதம் 'ரெடி'யானது.



என் அன்புத் தாமிராவுக்கு,

நம்மைப் பற்றிய கிசு, கிசு அலுவலகத்தின் சுவர்களில் முட்டி மோதுகிறது...! ஆணும், பெண்ணும் நண்பர்களாய் இருப்பதில் எவ்வளவு சிக்கல்கள். பெண்ணே பெண்ணைப் பார்த்து பயப்பட வேண்டிய சங்கடமான சூழல்... ஒருத்தியின் சந்தோஷம் மற்றவளுக்கு எரிச்சலை ஏற்படுத்துகிறது... நீ ஒரு ஆணாகியிருந்தால் உன்னோடு கை கோர்த்துக் கொண்டு வீதிகளில் போகலாம். நினைக்கவே மனது இதமாகயிருக்கிறது..! உன் கண்களின் ஓரத்தில் விவரிக்க இயலாத சோகமும் வலியும் தெரிகிறதே ஏன்...? நீ விரும்பினால் எழுது.

என்றும் அன்புடன்
சித்தார்த்

மறுநாளே கடிதம் வந்தது.

ப்ரியமான தோழருக்கு...! உங்கள் கடிதம் என் மனத்திற்கு இதமாயிருந்தது... நீங்கள் எழுதியது உண்மை. ஆண்களைவிட பெண்கள்தான் பெண்ணைப் பற்றி புறம் பேசுகிறார்கள். மனசு விட்டுப் பேசுறதில்லை... அப்படியே பேசினாலும் புடைவை பற்றியும், நகை பற்றியும்தான்...! சிந்தனைகள் ஆரோக்கியமாக இல்லை...!

யார் இவள்? என் உடன்பிறவா சகோதரியா...? எனக்குப் பிறக்காத பெண்ணா...? அன்பு காதலியா....? என்னை விட வயதில் குறைந்த விசித்திரமான அம்மாவா...? மூதுரை சொல்லும் சின்ன வயசு பாட்டியா...? பூர்வஜென்ம தோழமையா...? பார்த்தமட்டில் பரவசம்... பதற்றம்... பொங்கி... பொங்கி... இவளைப் பாதுகாக்கணும்... எதிலிருந்து காப்பாற்றணும்...! இவளுக்கு என்ன குறைச்சல்? நல்ல படித்த பெண். அரசாங்க வேலை... தாயின் அன்பு... சகோதரிகளின் பாசம்... பின் எதிலிருந்து...? சோகத்திலிருந்து வரப் போகும் முதுமையிலிருந்தா...? அவளிடம் எதைத் தேடுகிறேன்...? சிந்தனையின் முடிச்சுகள்... அவிழ்க்க முடியாத முடிச்சுகள்...!

அவளைக் காப்பாற்றுவது இருக்கட்டும்...! என்னை இவளிடமிருந்து யார் காப்பாற்றுவது...! மனசு ரீதியாக நான் அவளுடன் ஐக்கியமாகிப் போனேன்...! அவள் என்னுடன் நிரந்தரமாக இருக்கப் போவதில்லை...! சொந்த ஊருக்கு மாறுதலாகிப் போய் விடுவாள்...!

ஏற்படப் போகும் இடைவெளி. இடைவெளி ஏற்படுத்திய சூனியம். சூனியத்தால் வரும் பயம். தனிமை உலுக்குகிறது...! மெல்ல மெல்ல அவளைத் தவிர்க்க முயல்கிறேன். அவள் வரும்போது எனது இருக்கையிலிருந்து தப்பித்துக் கொள்கிறேன். அதே போல் மாலையிலும். இப்படி மூன்று நாட்கள் அவள் கண்களில் படாமல் கடன்காரனைப் போல் மறைந்து திரிகிறேன்...!

நான்காவது நாள் இருவரும் நேருக்கு நேர் சந்திக்கும் வாய்ப்பு வந்தது...! இருவரும் மௌனமாகிப் போனோம்...! வார்த்தைப் படுத்த முடியாத சங்கடம்... ஒரு இடைவெளி... நான் ஏன் அவளைத் தவிர்த்தேன் என்று அவளுக்குக் கேட்கத் தோன்றவில்லை. மௌனமாய் ஒரு புன்னகை! இருவரிடமிருந்தும் மனம் முழுக்க மழைச் சாரல்...! அவள் திரும்பித் திரும்பிப் பார்த்துக் கொண்டே போனாள். மறுநாள் காலை நான் அவளுக்குக் கடிதம் எழுத தொடங்கியபோது, பியூன் வந்து அவள் கடிதத்தை என் மேஜை மீது வைத்தான். ●

**முத்துபாரதி**

இன்னும் பதினைந்து நிமிடங்கள் தாண்டியிருந்தால் தரையைத் தொட்டிருப்பார்கள், சாதனைப் புன்னகையோடு புகைப் படங்களுக்கு போஸ் கொடுத்திருப்பார்கள். இன்னும் ஆறு நிமிடங்கள் ஒன்றும் நிகழாதிருந்தால், பூமியைச் சுற்றியுள்ள காற்று மண்டலப் பகுதிக்குள் நுழைந்திருப்பார்கள்.

ஆனால் காலதேவன் வேறு மாதிரி



# சொப்பனக்காரி

இரவு முழுவதும்
நட்சத்திரங்கள் பார்க்கிறோம்

தென்படுவாயா
கல்பனா சாவ்லா?

பிரபஞ்ச நீச்சல்காரியே
பால்வீதியில் மிதப்பாயோ?

ஒளியின் வேகத்தை
விஞ்சும் மரணம்!

சூரிய வீதியில்
சுற்றிய கனவு மகளே... சொல்

நிலாவைக் காட்டி
அம்மா சோறூட்டுகையில்
கால் பதிக்கத் தொடங்கி

அப்பாவின் விரல் பிடித்த
உன் தெருமுனைப் பயணம்
விண்ணுக்குள் முகிழ்த்ததோ!

பந்துகளை விண்கோள்களாய்
ஸ்பரிசித்தப் பள்ளி நாட்களோ?

நீர்க் குமிழ்களை விட
அதிகம் பிடித்தது
அனற்குமிழ்களோ?...

விழ்கின்ற விண்கற்கள்
பூச்சொரிவோ?



# அந்த மூன்று பேரின் கதி?

தீர்மானித்துத் தொலைத்துவிட்டான் - நடந்த வான் விபத்தால் கருகியும் சிதறியும் டெக்ஸாஸ் மாநிலம் மற்றும் அதைச் சுற்றியுள்ள பகுதிகளில் கிடக்கும் அந்த ஏழு விண் வெளி வீரர்களின் மொத்த உடல் பாகங்களையும் கண்டுபிடிக்க, பல காலம் தேவைப் படலாம் என்கிறார்கள் நாஸா விஞ்ஞானிகள்.

ஹரியானாவைச் சேர்ந்த கல்பனா சாவ்லா இதில் இறந்ததால் நமக்கு அதிகப்படி வருத்தம் இருப்பது இயல்புதான். இந்திய இளம்பெண்களுக்கு ஒரு ரோல் மாடலாக இருந்தவர் அவர். 'கிரண் பேடி மாதிரி', 'அருந்ததி ராய் மாதிரி' என்ற வரிசையில் 'கல்பனா சாவ்லா மாதிரி'யும் இடம் பெறத் துவங்கிய காலகட்டத்தில் தமது இரண்டாவது விண் பயணத்தில் சிதறிப் போனது சோகம்.

★ கல்பனா சாவ்லா

விண்வெளிச் சரித்திரத்தில் ரிஸ்க்குகளுக்குக் குறைவில்லை. என்றாலும் அதில் இடம் பெற்றுள்ள மூன்றாவது மிக துரதிர்ஷ்டமான பெரும் விபத்து இது. ஆனால் அதிலும் ஒரு வேதனையான புள்ளி விவரம். பூமியை நோக்கி வரும்போது ஒரு விண்கலம் (மனிதர்களோடு) வெடித்துச் சிதறியது இதுவே முதல்முறை.

சூரிய வீதியில் சுற்றிய
கனவு மகளே... சொல்

உனக்குச் சமாதி தர
நிலாப் பள்ளங்கள் தயாராய் நிற்க

ஏன்டி இந்த
வான தகனம்?

எந்த வால்மீனும் முளைக்காமலேயே
இந்த மரணம்!

காணாமல் போன
கனவின் மகளே
கண்டெடுப்போம்...
நீ
கூவத்துக் கரையோரம்
கோலி விளையாடலாம்

ஊரோரம்
கொட்டாங்குச்சியில்
சோறு சமைக்கலாம்

சேரிக்குள்
நொண்டியடிக்கலாம்
கண்டெடுப்போம்
கிடைக்காமலா போகும்
இந்தியச்சி சூட
இன்னும் சில மகுடங்கள்?...



**நா. வே. அருள்**

அறிவியல் தொழில் நுட்ப முன்னேற்றம் என்பதே நடுநடுவே பின்னடைவுகளைச் சந்தித்து அதிலிருந்து மீண்டு சாதனை படைப்பதாகத்தான் இருந்து வந்திருக்கிறது. விபத்து என்பது (அது சாலையிலோ, ரயிலிலோ, விண்ணிலோ) சகஜமானதுதான் என்பதுடன், இதுபோன்ற விபத்துக்களில் திறமைசாலிகள் இறந்து போவதும் புதிதல்ல.

ஆனால் இந்த விபத்தின் காரணமாக ஒரு மிகப் பெரிய விண்வெளித் தொழில் நுட்பம் தனது அடுத்த அடியை எட்டுவதில் பெரும் சுணக்கம் ஏற்படும் என்பது கவலையானது. இதைக் கொஞ்சம் விளக்கமாக அறிந்து கொள்ள, எதற்காகக் 'கொலம்பியா' விண்கலத்தின் மேற்படி ஏழு விண்வெளி வீரர்களும் பயணித்தார்கள் என்பதைத் தெரிந்து கொள்ள வேண்டும்.

**1998**ல் ஒரு மெகா திட்டம் நடைமுறைப் படுத்தப்பட்டது. அதுதான் சர்வதேச விண்வெளி நிலையம். விண்ணில் இருந்து கொண்டே பலவித ஆராய்ச்சிகளைச் செய்வதற்காக உருவாக்கப்பட்ட இதில் பதினாறு நாடுகள் பங்கு கொண்டிருக்கின்றன. அவை அமெரிக்கா, ரஷ்யா, ஜப்பான், கனடா, பிரேஸில், ஜெர்மனி, இத்தாலி, பிரான்ஸ், நார்வே, ஸ்வீடன், இங்கிலாந்து, ஸ்பெயின், பெல்ஜியம், ஸ்விட்சர்லாந்து, ஹாலந்து மற்றும் டென்மார்க். இந்த விண்வெளி நிலையம் முழுவதுமாக உருவாகிவிடவில்லை. என்றாலும் சில முக்கியமான கட்டங்கள் முடிவடைய, இப்போதே அது பூமியைச் சுற்றிக் கொண்டிருக்கிறது.

இந்த விண்வெளி நிலையத்திலேயே சில விஞ்ஞானிகள் இருந்து கொண்டு பல்வேறு ஆராய்ச்சிகளைச் செய்து கொண்டிருக்கிறார்கள். புவியீர்ப்பு கிடையாது என்பதிலிருந்து, காற்று மண்டலம் இல்லை, என்பது வரை பல வித்தியாசமான இயற்கைச் சூழல்கள் அங்கு நிலவுவதால், சில குறிப்பிட்ட தாவரங்களும், மனித உடல் திசுக்களும் அங்கு இன்னும் வேகமாக வளருமா என்பதைக் குறித்த ஆராய்ச்சிகளும் அவற்றில் அடக்கம்.

"இப்போது கொலம்பியா விண்கலம் வானில் சிதறிவிட்டதன் காரணமாக 'பாதுகாப்பு' ஏற்பாடுகள் நூறு சதவிகிதம் திருப்தி அளித்தப் பிறகுதான் இனி அடுத்த விண்கலத்தை அனுப்புவோம்" என்று நாஸாவும், அரசும் அறிவித்து விட்டதால் சர்வதேச விண்வெளி நிலைய ஆராய்ச்சிகளின் வேகம் பெரிதும் குறையும்.

இப்போதே கூட மூன்று விஞ்ஞானிகள் மேற்படி விண்வெளி நிலையத்தில்தான் தங்கிக் கொண்டு ஆராய்ச்சிகளை நடத்தி வருகின்றனர். நல்லவேளையாக கிட்டத்தட்ட ஜூன் மாதம் வரையிலான அவர்களுக்கான உணவு உட்பட அடிப்படைத் தேவைகள் ஏற்கெனவே அங்கு உள்ளன. அதற்குப் பிறகும் பூமியிலிருந்து எந்த விண்கலமும், ஏதோ ஒரு காரணத்துக்காக அனுப்பப்படாவிட்டால் கூட அவர்கள் கதி அதோகதியல்ல. அவசர நிலையின்போது அவர்கள் விண்வெளி நிலையத்திலிருந்து பூமிக்குத் திரும்பிவர ஒரு வாகனம் ஏற்கெனவே அங்கு பொருத்தப்பட்டிருக்கிறது.

**வி**லை மதிக்க முடியாத நஷ்டம் மனிதகுலத்துக்கு ஏற்பட்டிருக்கிறது. ஏழு உயிர்கள் மற்றும் ஒரு விண்கலம் மட்டுமல்ல, வேறுவித நஷ்டங்களும் இதில் உண்டு. கொலம்பியா விண்கலமே ஒரு விதத்தில் நடமாடும் பரிசோதனைக் கூடமாக இயங்கி வந்தது. சர்வதேச விண்வெளி நிலையத்தில் நடைபெறும் ஆராய்ச்சிகளில் சில, கொலம்பியா விண்கலத்திலும் நடைபெற்று வந்தன. இந்த ஆராய்ச்சிகளின் பலன்களும் இப்போது சிதறிவிட்டன.

விண்கலத்தின் இடது பக்க இறக்கையில் ஏற்பட்ட சிறு வெடிப்பா? எதிர்பார்ப்பை மீறிய அதிகமான வெப்பநிலையா? விண்கலத்தின் என்ஜின் போன்ற மையப் பகுதியிலேயே கோளாறா? என்பது போன்ற கேள்விகளுக்கான துல்லியமான விடை இன்னும் கிடைத்தபாடில்லை.

- **ஜி.எஸ்.எஸ்**



## காட்சி

- **கோபமாய்ப் பிழிந்து**
**கொடியில் நீ போட்டுப்போன**
**பூக்கள் நிறைந்த**
**உன் புடவையில்**
**வந்தமர்கிறது**
**வண்ணத்துப் பூச்சியொன்று**

*கவிதைகள் :*
*ஜெயந்தன். ஆர்.சி.*



# விருத்தாசலம் அரவிந்த்

"அரசியல் கட்சியில் இணைந்து பணியாற்றுவதை மக்களுக்குத் தொண்டாற்ற கிடைத்த வாய்ப்பாக மட்டுமே எடுத்துக் கொள்ள வேண்டும்" என்று இளைஞரான அரவிந்திடம் ஜெயேந்திர சரஸ்வதி சுவாமிகள் சொன்னபோது, அதனுடைய முழு அர்த்தமும் அவருக்குப் புரியவில்லை. ஒவ்வொரு முறை தரிசனத்தின் போதும், "வாஜ்பாய் பிறந்த நாளுக்கு மிட்டாய் கொடுத்து கொடியேற்றினால் மட்டும் போதுமா? அந்த நாளில் மக்களுக்கு ஏதாவது செய்ய வேண்டாமா?" என்று தூண்டி விட்ட போதுதான் பொறி தட்டியது அவருக்கு. ரத்த தானம், கண்தானம் என்று ஆட்களைச் சேர்த்து விருத்தாசலத்தை கலக்கி விட்டார். ஒரு முறை பெரியவர் "படிப்பறிவு இல்லாத கிராமத்து, தாழ்த்தப்பட்ட மக்களை அரசியல்வாதிகள் நன்றாகவே ஏமாற்றுகிறார்கள். எனவே நீ அவர்கள் மத்தியில் நிறைய செய்ய வேண்டும்" என்றவுடன் கடலூர் மாவட்டத்தில் உள்ள தாழ்த்தப்பட்ட மக்கள் வசிக்கும் பகுதிகளுக்குச் செல்லத் துவங்கினார் அரவிந்த். குழந்தைகளுக்கு நோட்டு, புத்தகம் வாங்கிக் கொடுப்பது, பாதியில் படிப்பை நிறுத்திய சிறுவர், சிறுமிகளுக்கு ஊக்கம் கொடுத்து, படிப்பைத் தொடர வைப்பது போன்ற பணிகள் தொடர்ந்தன.

சமீபத்தில் ஜெயேந்திரர் அரவிந்திடம், "பல விஷயங்களைத் தனி ஒரு மனிதனாக செய்ய முடியாது. தன்னார்வத் தொண்டு நிறுவனம் துவங்கு. அதன் மூலம் நிறையச் செய்யலாம்" என்று சொல்லவே அரவிந்த் ஃபவுண்டேஷன் என்ற அமைப்பை அவரது ஆசியுடன் துவங்கியிருக்கிறார். அந்த ஃபவுண்டேஷன் சார்பாக ஏழு கிராமங்களில் குடிநீர்த் திட்டம், நெய்வேலி சுற்று வட்டாரத்தில் நிலத்தடி நீரை உயர்த்துவது என்று பல பணிகள் திட்டமிடப் பட்டுள்ளன. தன்னார்வத் தொண்டு நிறுவனங்களுக்கு, மத்திய அரசு சார்பில் கிடைக்கும் உதவிகளைப் பற்றி அரவிந்த் எழுதியுள்ள புத்தகம், மேலும் பலரைத் தொண்டு செய்யத் தூண்டும். "நமது நாட்டில் சுமார் பன்னிரண்டு ஆயிரம் தன்னார்வத் தொண்டு நிறுவனங்கள் இருக்கின்றன. இவை ஆண்டு ஒன்றுக்கு நான்காயிரத்து ஐந்நூறு கோடி ரூபாயை மக்கள் சேவையில் கொட்டுகின்றன. அரசு நிதி உதவி மற்றும் வெளிநாட்டிலிருந்து வரும் நிதியையும் சேர்த்த கணக்கு இது. குறிப்பிடத்தக்க விஷயம், தமிழ்நாட்டில்தான் அதிக அளவில் தொண்டு நிறுவனங்கள் இருக்கின்றன" என்கிறார் அரவிந்த். விருத்தாசலம் பகுதியில் நலிந்து போய் இருந்த செராமிக் தொழிலுக்கு உயிர் கொடுத்ததில் அரவிந்த்துக்குப் பெரிய பங்கு உண்டு. இதன் மூலம் பதினைந்தாயிரம் தொழிலாளர்கள் வாழ்வில் வெளிச்சத்தைத் தொடர வைத்திருக்கிறார்.

— தில்லப்பா



# லல்லு மல்லு

—கதிர்



கடலைப் பத்தி என்ன நினைக்கிறே...
சே! முடிவில்லாம நீண்டுக்கிட்டே போகுது!




அதோ! அலை வந்து கரையைத் தழுவுதே... அதைப் பத்தி...?
ம்க்கும்... உட்கார்ற இடத்தையெல்லாம் ஈரமாக்குது




கடலும் வானும் ஒரே கோட்டில் இணையறதைப் பத்தி...?
அது சும்மா கண்ணை ஏமாத்தற வேலை!




பேசாம சுண்டலே சாப்பிடலாம்
தேங்ஸ் லல்லு




சுண்டல்காரா மூணுசுண்டல்




கடலும் வானும் கிடக்குது போ! மாங்காயும் சுண்டலும் இணைஞ்சா சூப்பர்தான்!




சே! சுண்டலுக்குத்தான் இவ்வளவு பில்ட்அப்பா!

Registered with the Registrar of Newspaper of India under No. 1041/57 * Registered No. TN / PMG (CCR) 572 / 03 - 05 *
Licensed to post without prepayment under PMG's Licence No. WPP 358 * Registered as a Newspaper in Srilanka

## வேளாண்மை செய்வோருக்கு வேண்டுகோள்:

எங்களது இயற்கை மருத்துவ மனைக்கும் மற்றும் எங்களிடம் இயற்கை வழி சிகிச்சை பெற் றோருக்கும் இயற்கை உரங்கள் மட்டும், அதாவது வேப்பம்புண்ணாக்கு மற்றும் பசுந்தாள் உரங்கள், பசுமாட்டுச் சாணங்கள் மட்டும் இட்டு, பூச்சி மருந்தாக வேப்பெண்ணெய் கலந்த இயற்கை பூச்சிமருந்து அடித்து விளைந்த காய்கறிகள், கைகுத்தல் அரிசி மற்றும் எங்களுக்கு தேவையான மூலிகைகள் பயிரிட்டுத்தர – இயற்கை வழி சாகுபடியில் ஆர்வம் உள்ளவர்கள், தயவு செய்து எங்களுடன் தொடர்பு கொள்ளுங்கள். இதர விபரங்களை நேரில் பேசிக் கொள்ளலாம்.

## ARTHRITIS - மூட்டுவலி



❋ கை, கால்களில் மூட்டு வீக்கமும், வலியும். ❋ கை, கால் விரல் மூட்டுகளில் வீக்கமும் வலியும். ❋ கழுத்து வலி (Cervical Spondylitis) ❋ நடுமுதுகின் கீழ்பகுதியில் வலி (Lumbar vertebra and Sacral Joint area) ❋ இடுப்பு எலும்பும் (Pelvic Bone) தொடை எலும்பு தலையும் (Femoral Head) சேருமிடம். ❋ குதிகால் இணைப்புகளில் வலி. ❋ குதிகால்களில் எலும்பு வளர்ந்து நடக்க முடியாமல் வலி. (Calcaneal Spur) முதலியவை பல ஆண்டுகளாக இருந்தாலும் ஆங்கில மருத்துவருடைய ஆலோசனையின்படி வித்தியாசமான இயற்கை வைத்திய முறையில், பக்கவிளைவுகள் இல்லாமல் நலம்பெற செய்கின்றோம். இந்தியா மற்றும் வெளிநாடுகளில் இருந்தும் வியாதியஸ்தர்கள் வருகிறார்கள்.

25.11.02

அன்பான இயக்குநர் **திரு. எஸ். புருஷோத்தமன்** அவர்கட்கு,

**அடையார் நேச்சர் கியூர் சென்டரு**க்கு நான் சென்றது, நோய்க்குத் தீர்வு காண்பதற்கு என்பதைவிட ஒரு வித ஆர்வமே காரணமாகும். எனினும் சிகிச்சைத் தொடங்கி இரண்டாவது நாள் அன்றே அடையார் நேச்சர் கியூர் சென்டரைப் பாராட்டுபவனாகவே மாறி விட்டேன். எனது இடது பாத வலி குணமாகி விட்டதோடு மட்டுமல்லாமல் என் இரண்டு கால்களுக்கும் மீண்டும் அத்தகைய துன்பமான வலி நேராதிருக்கப் போதுமான முன் எச்சரிக்கைகளுடன் இருக்குமாறு தங்களின் திறமையான மருத்துவக் குழுவினர் உறுதி செய்தனர். நெருக்கடியான, இறுக்கமான சூழ்நிலையிலும் கூட முகமலர்ச்சியுடன் பாராட்டத் தக்கவாறு தங்களின் பணிகளைச் செய்த உங்களுக்கும், உங்கள் மருத்துவக் குழுவினருக்கும், இயற்கை தாவர எண்ணெய் மற்றும் நீராவி சிகிச்சைப் பிரிவிலுள்ள உதவியாளர்களுக்கும் இயற்கை முறையில் உடலுக்குரிய மசாஜ் முதலிய சிகிச்சைகளைச் செய்பவர்களுக்கும், பிராணவாயு சிகிச்சை, தசை தளர்வு சிகிச்சை செய்பவர்களுக்கும் என்னுடைய தனிப்பட்ட நன்றியையும், பாராட்டுதல்களையும் தெரிவித்துக் கொள்கிறேன். தாங்கள் பெற்றிருப்பதைப் போன்று வியக்கத்தக்க பணியாளர்களைக் கொண்டுள்ள எந்த நிறுவனமும் சிறந்த பெருமை கொள்ளக் கூடியதாகவே இருக்கும். சிறந்த முனைப்புடனும் உயர்ந்த அர்ப்பணிப்புடனும் பணியாற்றும் உங்கள் குழுவினருக்கும், உங்களுக்கும் மீண்டும் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

– திரு. சித்தார்த் அய்யர், எண். 70, கிரேஸ் பென்ஸ் அவின்யூ,
வெஸ்ட் பென்னான்ட் ஹில்ஸ், N.S.W. சிட்னி - 2146, ஆஸ்திரேலியா.

## ASTHMA - ஆஸ்துமா

1. **Dyspnea** *(மூச்சுத் திணறல்)* 2. **Respiratory difficulties** *(மேல்மூச்சு வாங்குதல்)* 3. **Dry cough** *(வறட்டு இருமல்)* 4. **Cough with sputum** *(சளியுடன் கூடிய இருமல்)* 5. **Running Nose** *(மூக்கில் நீர் வழிதல்)* 6. **Nasal Block** *(மூக்கடைப்பு)*

**WEIGHT REDUCTION (உடல் பருமன்) for LADIES & GENTS மற்றும் நாள்பட்ட இதர நோய்களுக்கும் எங்களிடம் ஆலோசனை கேட்கலாம்.**




# அடையார் நேச்சர் கியூர் சென்டர்



# ADYAR NATURE CURE CENTER (TM)

Regd. Hospital

No. 6, SECOND CROSS STREET, KASTURBHA NAGAR, ADYAR, CHENNAI - 20.
Phone: 2441 3399, 2440 2470. Tele Fax: 044-2491 6650 (காந்திநகர் பஸ்டெப்போ எதிரில்)
www.adyarnaturecure.com E-mail: adyarnaturecure@yahoo.com,

குறிப்பு: சாதா, A/c தங்கும் அறைகள் கலர் டீவி, வசதியுடன் கிடைக்கும்.
சைவ உணவு வசதி மட்டும் உண்டு. முன்பதிவு அவசியம்.